வெளியீடுஎண். 553.

உ

குருபாதம்

## திருப்பெருமணநல்லூர்த்

## தேவாரத் திருப்பதிகங்களும்

# திருவெண்ணீற்றுமை பிள்ளைத்தமிழும்

மகாகும்பாபிஷேக மலர்







தருமையாதீனம் ] [ விலை. 60 ந. பை

1964



தருமையாதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்

வெளியீடு எண் 553.



உ

குருபாதம்

# திருப்பெருமணநல்லூர்த்

## தேவாரத் திருப்பதிகங்களும்

# திருவெண்ணீற்றுமை பிள்ளைத்தமிழும்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

25ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த

பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்

அருளாணையின்படி,

ஆச்சாள்புரம்

ஸ்ரீ சிவலோகத்தியாகராஜ சுவாமி தேவஸ்தானம்

மகாகும்பாபிடேக மலராக

வெளியிடப்பெற்றது.

29—4—1964.

உ

குருபாதம்

# முன்னுரை

## திருப்பெருமணநல்லூர்த் தலச்சிறப்பு

**சோழ**நாட்டில், காவிரியின் வடகரையில், தேவாரப் பாடல் பெற்ற தலங்கள் அறுபத்து மூன்றனுள் ஐந்தாவதாக எண்ணப்பெற்று விளங்கும் **திருநல்லூர்ப் பெருமணம்** சிறப்புடையதொன்று. இது, சமயாசாரியர் நால்வருள் முதல்வராகிய **திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்**, தமது திருமண நாளில், அத்திருமணத்திற்கு வந்த பலர்க்கும். கொள்ளை கொள்ள வீடு உதவி, தாமும் காதலியைக் கைப் பற்றிச் சோதியுட் புகுந்து, சிவபெருமான் திருவடி நிழலை எய்திய அரிய பெருமையை உடையது.

இதன்கண் வசிட்டர் முதலிய முனிவர்கள் சிவலோகக் காட்சியைக் கண்டனர், '**மாந்தாதா**' என்னும் சூரிய குலத்து அரசன் இங்குள்ள திருக்கோயிலுக்குத் திருப்பணி செய்து விழா முதலியன எடுத்து, நலம் பல எய்தினன், மற்றும், கங்கை, முருகன், காகமாமுனிவர் ஆகியோரும் வழிபட்டுச் சிவபெருமானது திருவருளைப் பெற்றனர்.

ஞானசம்பந்தருக்கு முத்தியும், வசிட்டர் முதலியவர் கட்குச் சிவலோகக் காட்சியும் தந்தமையால் இத்தலம், '**சிவலோகம், முத்திபுரம்**' என்னும் பெயர்களைப் பெற்றதோடு இங்கு இறைவர், '**சிவலோகத் தியாகர்**' என்னும் பெயருடன் விளங்குகின்றார். திருஞானசம்பந்தர் திருமணத்

தில் பலரும் சோதியிற் புகும்பொழுது அவர்கட்குத் திருவெண்ணீறு அளித்தமையால், அம்மை திருவெண்ணீற்றுமை எனப் பெயர்பெற்றுத் திகழ்கின்றாள்.

கோயிலின் முன்பு பஞ்சாக்கர தீர்த்தம் என்னும் சிறந்த தீர்த்தம் உள்ளது. இது, தன்னிடத்தில் மூழ்குவோருக்கு எல்லாப்பாவங்களையும் போக்கவல்லது. ஒழுக்கம் தவறி மிசப்பெரும் பாதகங்களைச் செய்து திரிந்த 'வேதாந்தன்' என்னும் அழிதகன் ஒருவன் இதில் தன்னியல்பில் முழுகினமையால், தான்செய்த பாதகங்கள் எல்லாம் நீங்கப் பெற்று, நற்கதி அடைந்தான்' என்று இத்தலத்தின் புராணம் கூறுகின்றது. இதுவன்றி, ஒவ்வொரு திக்கிலும் ஒவ்வொரு முனிவர் பெயரால் எட்டுத் தீர்த்தங்கள் உள்ளன. மற்றும் பல தெய்விகச் சிறப்புக்கள் உடையது இத்தலம்.

பிரமதேவன் பல தலங்களை வணங்கிக்கொண்டு சிகாழிக்குச் செல்லும்பொழுது, இத்தலத்தைக்கண்டு, 'இஃது ஒரு நல்ல ஊர்' என்று கூறினமையால் நல்லூர் எனப் பெயர் பெற்றது' என்று, இதன் பெயர்க் காரணம் கூறப்படுகின்றது. 'பெருமணம்' என்பது, இங்குள்ள கோயிலின் பெயரே என்பது, திருஞானசம்பந்தர் இக்கோயிலுக்குச் சென்ற நிகழ்ச்சியைக் குறிக்கும் இடத்தில், சேக்கிழார், "சிவன்அமர்ந்தருளுஞ் செல்வத் திருப்பெருமணத்துள் எய்தி" எனக் கூறுதலால் விளங்குகிறது. எனவே நல்லூர்கள் பலவற்றுள் இது பிரிந்து தோன்றுவதற்கு. 'திருப்பெருமண நல்லூர்' எனப்பெற்றது என்பதும், 'திருநல்லூர்ப் பெருமணம்' என்பது, 'திருவெண்ணெய் நல்லூர் அருட்டுறை' என்பதுபோல, இங்குள்ள திருக்கோயிலைக் குறிப்பது என்பதும் புலனாகும். தலம் இப்பொழுது 'ஆச்சாள் புரம்' என வழங்கப்பெற்று வருகின்றது.

இத்தலம், சீகாழிக்கு வடகிழக்கில், 'கொள்ளிடம்' என்னும் புகைவண்டி நிலையத்திற்குக் கிழக்கே மூன்று கல் தொலைவில், 'வடபொன்னி' எனப்படும் கொள்ளிட நதியின் தென்கரையில் உள்ளது. இது தருமையாதீனத்துக்குச் சொந்தமானதாய், மகாசந்நிதானங்களால் நித்திய நைமித்திக பூசைகள், விழாக்கள் முதலியவைகளுடன் வழி வழியாக நன்கு பரிபாலிக்கப்பெற்றுவருகின்றது.

ஆதீனத் திருக்கோயில்கள் பலவற்றையும் இப்பொழுது உயரிய திருப்பணிகள், திருக்கவசங்கள், திருவாபரணங்கள், அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகங்கள் முதலியவற்றால் சிறந்தோங்கச் செய்துவரும், தருமையாதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம் **ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களது** திருவுளப்பாங்கின் வண்ணம் இத்திருக்கோயிலுக்கு இப்பொழுது திருப்பணிகள் முற்றுப்பெற்று, அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் நடைபெறுகின்றது. அவர்களது அருளாணையின் வண்ணமே, மகாகும்பாபிஷேக விழா மலராக இந்நூல் வெளிவருகின்றது.

**தேவாரத் திருப்பதிகங்கள் :**

இத்தலத்திற்குத் திருஞானசம்பந்தர் அருளிச்செய்த தேவாரத் திருப்பதிகங்கள் இரண்டு உள்ளன. அவை இரண்டும் மிகவும் இன்றியமையாத சிறப்புடையன.

முதலில் அருளிச்செய்தது, "**கல்லூர்ப் பெருமணம்**" எனத் தொடங்கும் திருப்பதிகம். இது, ஞானசம்பந்தர் தமக்குப் பெற்றோர் முதலியவர் செய்வித்த திருமணத்தை ஏற்றுக்கொண்டபொழுது, 'இந்த இல்லொழுக்கம் வந்து சூழ்ந்ததே இவள் தன்னோடும் அந்தமில் சிவன்தாள்

சேர்வன்' என்னும் ஆதரவு பொங்க, தம்மைத் தன் திருவடியிற் சேர்த்துக்கொள்ளுமாறு சிவபெருமானை வேண்டிப் பாடியருளியது.

இதில் தமது கருத்தினை நாயனர் பல இடங்களிலும் குறிப்பாகவே அருளியுள்ளார். "நல்லூர்ப் பெருமணம் புக்கிருந்தீர் **எமைப் போக்கருளீரே**" என ஓர் இடத்தில் வெளிப்படையாகவும் வேண்டியுள்ளார். இவ்வேண்டு கோளின்படி பெருமான் தன் திருக்கோயிலில் சோதி ஒன்றைத் தோன்றச் செய்து, அதுவழியாக, திருமணத் திற்கு வந்திருந்தோர் பலரையும், முடிவில் திருஞானசம்பந் தரை அவரது துணைவியாரோடும் தனது திருவடியில் சேர்த்துக்கொண்டான். ஆகவே, இத்திருப்பதிகம் எந்நிலை யில் உள்ளவர்க்கும் விடு தரவல்லது என்பது நன்கு விளங் கும். நாயனரும் இதன் திருக்கடைக்காப்பில், 'இதனை ஓதுவோர்க்குப் பழிபாவங்கள் அற்றொழிய, பிறவி நீங்கும்' என்று அருளியுள்ளமை கருதற்பாலது.

ஞானசம்பந்தர் தமது அருள் வாழ்க்கையில் முடிவாக அருளிச்செய்த திருப்பதிகம் **நமச்சிவாயத் திருப்பதிகமே.** இஃது, இறைவன் சோதியை உண்டாக்கி, 'இதில் ஈனமாம் பிறவி தீர யாவரும் புகுக' என்று அருளிச் செய்ய, அதன் படியே அச்சோதியினுள் சம்பந்தர் புக நினைத்தபொழுது அருளிச்செய்தது. எனவே. ஞானசம்பந்தர் இவ்வுலகி னின்றும் நீங்கும்பொழுது நமக்கு அளித்துச்சென்ற நல்லாசி மொழியே இத்திருப்பதிகமாகும். ஆகவே, அதனை நாம் உறுதியாகப்பற்றி ஒழுகினல், எல்லா நன்மைகளையும் எளிதில் எய்துதல் திண்ணம். இத்தகைய அரிய திருப்பதி கங்களும் நிகழ்ச்சிகளும் வாய்க்கப்பெற்றது இந்நல்லூர்த் திருத்தலமே.

**பிள்ளைத்தமிழ் :** இத்தலத்தில் அம்மைக்கு, 'திருவெண் ணீற்றுமை' எனப் பெயர் வழங்குதற்குரிய காரணம் மேற் சொல்லப்பட்டது. அவ்வம்மையின் மீது, அண்மைக் காலத்தில் வாழ்ந்த, திரிசிரபுரம் **மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை** அவர்களால் பாடப்பட்ட **பிள்ளைத்தமிழ்** உள்ளது. மகாவித்துவானது பெரும்புலமையும், வாக்கு வன்மையும், செய்யுள் இன்பங்களும் உலகம் அறிந்தவை, அதனால். இப்பிள்ளைத் தமிழிலும் அச் சிறப்புக்களெல்லாம் நிறைந்திருத்தல் இயல்பே,

**காப்பு :** பிள்ளைத்தமிழ்களில் காப்பாக, விநாயகக் கடவுட்கு மட்டுமே ஒருசெய்யுள் இருத்தல் வழக்கம். அத னுடன், ஞானசம்பந்தர் காப்பு ஒன்றும் இதன்கண் உள் ளது. இஃது, இத்தலத்தின் பெருமைகளுக்கெல்லாம் சிறந்த காரணம், ஞானசம்பந்தர் இங்குப் பலருக்கும் முத்தி கொடுத்துத் தாமும் முத்தி பெற்றதேயாகும் என்னும் கருத்தினால் அமைக்கப்பட்டது என்றே கொள்ளுதல் பொருந்தும்.

காப்பிலும், காப்புப் பருவத்திலும், **வழித்துணை விநாயகர், பொய்யாத விநாயகர், சிவலோகத் தியாகர்** போற்றப்பெறுகின்றனர். சிவலோகத் தியாகர், திருவெண் ணீற்றுமை இப்பெயர்கள் பல இடங்களில் பலவகைச் சிறப்புக்களுடன் எடுத்துக் கூறப்படுவதைக் காணலாம். **'விபூதிக் கல்யாணி'** என்பது, 'திருவெண்ணீற்றுமை' என்பதற்கு, ஆசிரியர் கூறும் ஒரு சிறப்புப்பெயர். பஞ்சாக் கரத் தீர்த்தமும், கங்காகூபமும் சில இடங்களில் இதில் பேசப்படுகின்றன.

**செய்யுளின்பம் :** சங்க காலத்திற்குப்பின் தமிழ் இலக்கியங்கள், 'பிரபந்தங்கள்' என்னும் வகையில் வளர

லாயின. அப்பொழுதே பிள்ளைத்தமிழ்கள் பல இருந்தன என்பது, சில பல சான்றுகளால் நன்கறியப்படினும், இக் காலத்துக் காணப்படுவன, இரண்டு மூன்று நூற்றாண்டு கட்கு உட்பட்ட பிள்ளைத்தமிழ்களேயாம். இவை பெரும் பாலும் இறைவன்மீதும், ஆசிரியர்கள்மீதும் பாடப்பட்டன. இவைகள் அனைத்திலும் இறைஅன்பு ஒருவகையாகவே நிறைந்திருப்பினும், சொற்சுவை பொருட்சுவைகள் நிரம்பி, செவ்விய மிடுக்கான நடையுடன் இலக்கிய நலம் மிக்குத் தோன்றுபவை, குமரகுருபர அடிகள் அருளிய பிள்ளைத் தமிழ்களே என்று கூறலாம். அதனால், பிற்காலப் பிள்ளைத் தமிழ்கள் பலவற்றிற்கு அவரது பிள்ளைத்தமிழ்களே முன் மாதிரியாக அமைந்துவிட்டன என்றலும் மிகையாகாது. ஆகவே, மகாவித்துவான் அவர்களது பிள்ளைத்தமிழ்களும் சொல்லாலும், பொருளாலும், நடையாலும் அப்பிள்ளைத் தமிழ்களையே அடியொற்றிச்சென்று, அவைகளைப்போலவே அழகுபெற்று விளங்குதலைக் காணலாம். இவ்வாறு முன் னைப் பெரியோர்களைப் பின்பற்றி ஒழுகுதல் பிற்காலத்து அறிஞர்கட்கு மிக்க பெருமை தருவதொன்றேயாகும்.

இத்திருவெண்ணீற்றுமை பிள்ளைத்தமிழ்க் காப்புச் செய்யுளில், ‘**பரன் வலத்துவிழி வெள்ளென இடத்து மருவும் விழி காரெனச் செய்ய வாயில்எழு குறுமூரல் வெண்ணிலவு தவழுந்தொறும்**’ என்பது, மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழில், ‘தார்கொண்ட மதிமுடி ஒருத்தன் திருக்கண்மலர் சாத்தக் கிளர்ந்து பொங்கித் தவழும்இள வெயிலும் மழ நிலவும் அளவளவலால் தண்ணென்று வெச்சென்று’ என்பதை ஒத்துக் காண்கின்றது.

“அகந்தைக் கிழங்கை அகழ்ந்து எடுக்கும் தொழும்பர் உளக்கோயிற்கு ஏற்றும் விளக்கே, “உயிர்த்துணையாம்

தோன்றாத் துணைக்கோர் துணையாகி" என்னும குமர குருபரர் வாக்குக்கள், அங்ஙனமே, '**தொண்டர் உளக் கோயிலுக்கமைத்த தூண்டா விளக்கே**' (பருவம் 5.1.) என்றும், '**தோன்றாத் துணைக்கோர் துணையானாய்**" '**தோன்றாத் துணைக்கோர் துணையாய சுட்டோதிமமே**, (பருவம் 8.9 9.6) என்றும் இதன்கண் காணப்படுகின்றன. இன்னும், "புவனங் கடந்து நின்ற ஒருவன் திருவுள்ளத்தில் அழகொழுக எழுதிப் பார்த்திருக்கும் உயிர் ஓவியமே" என்பதில் உள்ள சொல்லிலும், பொருளிலும் பிள்ளை யவர்கள் பெரிதும் ஈடுபட்டு, அவைகளைப் பல இடங்களில் எடுத்து ஆண்டு களிக்கின்றார்கள் (பருவம் - 5.1, 3.). முத்தப் பருவத்தில் முத்துக்கள் பலவற்றை இழித்துக் கூறும் பாடல்களிலும், அம்மானைப் பருவத்திலும், ஊசற் பருவத்திலும் அம்மனைகளையும், ஊசற் பலகைகளையும் புனைந்துரைக்கும் செய்யுட்களிலும், மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் உள்ள அப்பகுதிப் பாடல்கள் நிழலாடு கின்றன.

**சொல்நடை**: '**கடையரிய தடையிடையி லடைவரிய பெரியதண் கருணைமழை**' (பருவம் 1. 1.), '**மிடையும் - படையும் முடையும் படிதடி கடிவடி பயிலயில் வலனேந்தும் - குமரக் கடவுள்**' (பருவம் 4. 7.) என்றாற் போல்வன ஆசிரியரது மிடுக்கான சொல்நடைக்குச் சில எடுத்துக்காட்டுக்களாம்.

**சொல்நயம்** : சொல்நயங்களில், '**சிலேடை**' என்பது சிறந்ததோர் இடத்தைப் பெறுவது. நீராடற் பருவம் ஆறாவது செய்யுளில், பிள்ளையவர்கள் இச்சிலேடை இன்பத்தில் மிகவும் திளைத்தலைக் காண்கின்றோம். தாலப் பருவம் இரண்டாம் செய்யுளில் வாய்க்காலின் பெயர்கள்

பலவற்றையும், நல்லூரின் பெயர்கள் பலவற்றையும் நயம் பட, 'கால், வாய்க்கால், கால்வாய்' என்றும், நல்லூர், பெருமணம், நல்லூர்ப்பெருமணம், பெருமண நல்லூர்' என்றும் எடுத்துக்காட்டி, இரண்டிலும்வனம் (நீர், அழகு) உள்ளது என்கின்றார்.

'சிவபெருமான் புலிக்குட்டி ஒன்றிற்கு (வியாக்கிர பாதமுனிவர் புதல்வராகிய உபமன்னிய முனிவருக்கு)ப் பாற்கடலை அழைத்துக் கொடுத்தார்; அம்பிகை, சிங்கக் குட்டி ஒன்றிற்கு (பரசமய கோளரி - ஞானசம்பந்தருக்கு)த் தனது திருமுலைப்பாலைக்கொடுத்தாள்; அம்மை கொடுத்த பாலை உண்ட சிங்கக்குட்டி, உடனே ஞானப்பாடல்கள் பலவற்றை நிறையப்பாடியது; அதனால், சிவபெருமானது புகழ் நாணம் அடைந்துவிட்டது' (பருவம் 2. 5.) என்று கூறுவதில் சொல் நயமும், பொருள் நயமும் கலந்து இனிக் கின்றன. 'அம்மையின் திருவடிகள், அப்பனது தலைமதியை (தலையில் உள்ள சந்திரனை) முனியும்; சிறியேங்களது கடைமதியை (கீழான அறிவை) மகிழும்' (பருவம் 1. 7. ) என்பதில் உள்ள சொல்நயம், மனத்தை உருக்குவதாகும்.

வடசொற்கள்: செய்யுள் இன்பத்தின் பொருட்டுச் சில இடங்களில் வடசொற்களை வேண்டுந் திரிபில்லாமலும் ஆள்கின்றார். 'பத்மம், சந்த்ரோதயம், ப்ரவாகம்' (பருவம் 4-9, 5-9, 6-1, 9-5.) என்பவற்றைக் காண்க. ஆன்றோர் செய்யுட்களிலும் இவ்வாறு வந்தன உள.

புதிய ஆட்சி: 'எய்யா மையே அறியா மையே' என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தின் உரையுள், சேனா வரையர், 'அறிதல் என்னும் பொருட்டாய், எய்தல் என்றானும், எய்த்தல் என்றானும் சான்றோர் செய்யுட்கண்

வாராமையின், எய்யாமை எதிர்மறையன்மை அறிக' என்று கூறியுள்ளார். எனினும் மகாவித்துவான் அவர்கள் 'எய்யாமை' என்னும் சொல்லை எதிர்மறையாக வைத்து, அதன் உடன்பாடாக 'எய்த்து' என்ற ஒரு சொல்லை, அம்புலிப் பருவம் மூன்ருவது செய்யுளில், 'எங்கள் கருணாம்பிகை நின் இயல்முழுதும் **எய்த்து** முன் **எய்யாரின்** வருக என்ருள்' எனப் புதுவதாக ஆண்டுள்ளார்கள். இன்னோரன்னவை பெரும்புலவர்கட்கு ஏற்புடையனவாம். அன்றி, சான்ருேர் செய்யுட்கண் பிள்ளையவர்கள் இவ்வாறு வருவதைக் கண்டிருப்பார்கள் என்றும் எண்ணலாம்.

**கற்பனை நயம்:** பிற இடங்களில் காணப்பெருத கற்பனை நயங்கள் பலவற்றைப் பிள்ளையவர்களது பிள்ளைத் தமிழில் காணலாம். ஒன்று இரண்டைக் காண்போம்.

'பெண்கள், பிறந்த இடத்தில் வாழ்க்கை நடத்துதல் இல்லை' என்கின்ற சொல்லைப் பொய்யாக்கிவிட்டாள், இலக்குமி; எவ்வாறெனில், அவள் தான் பிறந்த இடமாகிய திருப்பாற்கடலை விட்டு நீங்காமல், தன் கணவன் ஆயர் பாடியில் வெண்ணெய் திருடி அடிபட்டு வருந்துவதை விட்டு அப்பாற்கடலுக்கே வந்துவிடும்படி அழைத்து நிறுத்திக்கொண்டாள் (பருவம் 1-7.)

திருநல்லூரில் கடல் அலைகள் சங்கு முதலியவைகளைக் கொண்டுவந்து வீசுவது, கடல், முன்பு சிவபெருமானுக்கு நஞ்சு கொடுத்த குற்றத்தை நீக்கிக் கொள்ளுதற்பொருட்டு, அளவற்ற சங்குகள், முத்துக்கள், பவளங்கள் மற்றைய இரத்தினங்கள் முதலியவற்றைக் கொணர்ந்துவைத்து அப் பெருமானை வழிபடுவதுபோன்றுள்ளது.

'நல்லூரின் சோலைகளில் உள்ள பலாப்பழங்களின் சாறும், மாம்பழங்களின் சாறும் வாழைப்பழங்களின் சாறும் பெருக்கெடுத்து ஓடிக் கடலில் வீழ்ந்து கடலின் உவரை மாற்றுவது, சோலைகள் தங்களைப் பெற்றெடுத்த நில மகளாகிய நற்றாய் மனம் மகிழும்படி தங்களை வளர்க்கும் செவிலித்தாயாகிய மேகத்தின் உண்கலத்தில் உவர் இருத்தல் கூடாது என்று அதனை மாற்றுவதுபோன்றுஉள்ளது.'

**நகைச் சுவை :** ஒன்பான் சுவைகளில் நகைச்சுவை ஒன்று. அதனைப் பெருநூல்களில் அளவாக நல்லாசிரியர் தோற்றுவிப்பர். அத்தன்மையை இப்பிள்ளைத்தமிழிலும் காணலாம்.

'அம்மை சிவபிரானைப் பிரியாது எப்பொழுதும் உடன் இருத்தலால், அப்பெருமானால் விரும்பிக் கூடப்பட்டு ஒரு மகனை (அரிகரபுத்திரனை) யும் பெற்ற மோகினி, இனி, சமையல் வேலைக்குத்தான் உரியவள்போலும் !' (பருவம் 1-5.)

"நல்லூரில் எருமைகள் நெற்கதிர்களையும், தாமரைப் பூக்களையும், செங்கரும்புகளையும் நிறையத் தின்றுவிட்டுத் தேமாமர நிழலில், பேருணவை உண்டு பெருந்துயில் கொள்வதைத் தவிர வேறொன்றையும் அறியாத மக்களைப் போல நன்றாய்த் தூங்கிக்கொண்டிருக்கும்"

**இறை அன்பு:** சமய இலக்கியங்களில், 'பத்தி' என்பது உயிர்நாடியானது. அதனைப் பிள்ளையவர்கள் நிரம்பப் பலவிடத்திலும் பலவாறு நிறைத்திருப்பினும், தமக்கே உள்ள அன்புநிலையைச் சில இடங்களில் அருமையாக வெளிப்படுத்தியுள்ளார்கள்.

" இமையவர் அனுதினம் முறையிட அடியன்பால்
அருள்மழை பொழிகாரே " (பருவம்-2.9)

என்று அம்பிகையை அவர்கள் கூறுவது,

" வான்வந்த தேவர்களும் மாலயனோடு இந்திரனும்
கானின்று வற்றியும் புற்றெழுந்துங் காண்பரிய
தான்வந்து நாயேனைத் தாய்போல் தலையளித்திட்டு "

என்பது முதலிய திருவாசகங்களை நினைப்பிக்கும்.

" கடையேன் குடிமுழுதாண்டு விரும்பிக்
காக்கும் பைங் கொடியே " (பருவம் - 4.8.)

" நாயேனுய் - உழலும் எனக்குநல் லருள்பொழி
உத்தம மாதே " (பருவம் - 5.8.)

" பாடும்நல்லோன் இவன் ஆகுவனே என
எள்ளாதே அடியேன்
பாடுபல் பாடல் விராவிய தார்புனை பொன்னே "
(பருவம் - 9.9.)

என்பன, ஆசிரியர்தம் அன்பின் பெருக்கை இனிதுணர்த்தும். சப்பாணிப் பருவம் முதலியவற்றில் பெரும்பாலும் ஒருமுறை விளித்தே, 'சப்பாணி கொட்டியருள்' எனப் பாடுவார்கள் புலவர்கள்; பிள்ளையவர்கள், 'அம்மை அம்மை ஒரு சப்பாணி கொட்டியருள்.' என்று இருமுறை விளித்து வேண்டிக்கொள்வது நெஞ்சத்தை உருக்கும்.

அம்மையின் பெருமை : முழுவதும் அம்பிகையின் பெருமையைக் கூறுவதே இந்நூல். என்றாலும், சில இடங்களில் இலக்கிய நயம்பட அதனைக் காட்டியிருத்தல் தனிச் சிறப்புடையதாகும்.

'குழந்தையைச் செங்கீரை ஆட்டுவிக்கும்பொழுது இருகைகளை நிலத்தில் ஊன்றவைப்பது முறை. அதனை ஆசிரியர் குறிப்பிடும்பொழுது, அம்மையின் கைகள் பிறரிடத்தில் சென்று ஏற்பன அல்ல; ஆதலின், அவை மேல் நோக்கி மலர்தல் இல்லை. முப்பத்திரண்டு அறங்களையும் வளர்க்குங்கை ஆகையால் அவை கீழ்நோக்கியே மலரும் என்கின்றார் (பருவம் 2-1.).

'சப்பாணி கொட்டுதல்' என்பது, இரண்டு கைகளையும் சேர்த்துத் தட்டுதல். அதனைக் குறிப்பிடும்பொழுது, 'ஒருவர் எதிரிலும் சேர்ந்து (கும்பிட்டு) அறியாத கைகள், இவர்கள் எதிரில் சேர்வதோ' என்று நினையாமல். அம்மையே எங்கள்முன் ஒருமுறை சப்பாணி கொட்டியருள்' என்று வேண்டுகின்றார் (பருவம் 4-4.).

**அரும் பொருள்கள் :** நால்கட்கு எல்லாச் சிறப்புக்களினும் மேலான சிறப்பு, பொருட் சிறப்பே. அதைப் பயன்படுத்தற்கு உதவியாய் நிற்பனவே, ஏனைய சிறப்புக்கள். அதனை இப்பிள்ளைத் தமிழிலும் நன்கு பெறலாம். முருகப்பெருமானைக் குறிக்கும் இடங்களில்,

> **'உணர் பெரும்புவன உயிர்எனுங் குகையுள்**
> **உறைதரும் குகன்'**

என்றும்,

> **'முன்னுசுப் பிரமணியன் ஓம் என்று நன்றுமறை**
> **முக்கால் உரைக்க மேவும் முருகன்'**

என்றும் கூறுகின்றார். இவை முறையே '**குகன்**' என்பதன் பொருளையும், **சுப்ரஹ்மண்யோம்; சுப்ரஹ்மண்**

**யோம்; சுப்ரஹ்மண்யோம்**' என்று முடியும் வேத மந்தி ரத்தின் பொருளையும் விளக்குவனவாம் (பருவம் 1-4-6). வேத மந்திரங்களில் ஒன்று, '**சதா சிவோம்**' என்றே முடிகின்றது. மற்றொன்று மேற்காட்டியவாறு முடிகின்றது. எனவே, சிவனை ஒருமுறையும், முருகனை மும்முறையும் 'ஓம்' என்கின்றது வேதம் என்பது பொருள். இது, காஞ்சிப் புராணத்திலும் கூறப்பட்டது.

அம்புலிப் பருவத்தில் சந்திரனை, 'நீ ஒருபுடை பாம்பு கொளினும், மற்றொருபுடை உலகத்திற்கு விளக்காக நிற் பாய்' (2) என்பது, 'ஒருபுடை பாம்பு கொளினும் ஒருபுடை-அங்கண்மா ஞாலம் விளக்குறூஉந் - திங்கள்போல்' என் னும் நாலடிச் செய்யுளை (148) நினைவூட்டி, தமக்கென வாழாது, பிறர்க்கென வாழும் பெரியோரது இயல்பை அறிவுறுத்துகின்றது.

'திருநல்லூரில், கரும்பைக் கறித்துத் நின்ற எருமை யின் வாயினின்றும் ஒழுகும் சாற்றை ஈக்கள் பல மொய்த்து உண்பது, விலை மாதரது வாயூறலை விரும்பிப் பருகும் காமுகர் செயல்போன்றுள்ளது' எனக் கூறுதல், தீயொழுக் கம் உடையவரை நய உரையினால் திருத்துவதாகும்.

கற்பனைக் களஞ்சியமாகிய சிவப்பிரகாச சுவாமிகள் தமது பெரிய நாயகியம்மை கட்டளைக் கலித்துறையில் பெண்ணின் பெருமையை ஒருவாறு பேசியுள்ளார். 'பெறு மவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த - மக்கட்பே றல்ல பிற' என்னும் திருக்குறளில், 'மக்கள்' என்றது ஆண் மக்களையே குறிக்கும் என்று உரை எழுதிய **பரிமேலழக ரோடு ஒத்த கருத்துடையவர்களும்**, பொதுவாகத் தம்மை வணங்குபவர்களை, 'நல்ல ஆண்மக்களையேபெற்றுவாழுங்கள் என்று வாழ்த்துகின்றவர்களும், மலையரையன் உமை

யம்மையைப் பெற்றபோது வெட்கம் அடைந்தார்கள்' என் பதே அவர் கூறியது. அதனைப் பிள்ளையவர்கள் இன்னும் விரிவாக இந்நூலின்கண் எடுத்துரைத்தல் (பருவம் - 2.2.) பெண்மக்களைப் பெரிதும் இகழ்வார்க்கு ஓர் நல்லறிவுரை யாகும்.

வாரானைப் பருவம் ஒன்பதாம் செய்யுளில், உழவர்கள் ஏரைப்பூட்டி உழும் முறையை மிக விரிவாகவும் நுட்ப மாகவும் ஒன்று விடாமல் எடுத்துக் கூறியிருப்பது, பிள்ளை யவர்களது உலக அனுபவத்திற்குச் சிறந்ததோர் எடுத்துக் காட்டாகும்.

**சித்தாந்தக் கருத்துக்கள் :** பிள்ளையவர்கள் போன் றோர்க்குச் சைவ சித்தாந்தம் ஒரு பெருஞ்செல்வம். அதனை அவர்கள் எடுத்து வழங்கும் இடங்கள் பெரிதும் மகிழ்ச்சிக்கு உரியனவாகும்.

'அம்மை, இறைவனது ஒருபாதியில் இருத்தல் சைவ சித்தாந்தத்திற் சொல்லப்படும் முத்திநிலை, இறைவ னோடு உயிர்கள் ஒன்றாகாமலும், வேறாகாமலும் இருப்பது என்பதனை விளக்கும்' (பருவம் - 2.3.) என்றனர்.

சப்பாணிப் பருவம் முதற் செய்யுளில், சைவ சித்தாந்தத் தத்துவங்கள் சொல்லப்படுகின்றன. முத்தப்பருவம் 5-ம் செய்யுளில் மலபரிபாகம் வந்தவர்கட்கு இறைவன் குருவாய் வந்து பல தீக்கைகளையும் செய்து, ஞானத்தை உபதேசிக்கும் முறை சொல்லப்படுகின்றது. வாரானைப் பருவம் ஐந்தாம் செய்யுளில், ஒரு சிவசத்தியே, 'ஆதி, இச்சை, ஞானம், கிரியை' என்னும் சத்திகளாய் நின்று உயிர்களின் பொருட்டுப் பஞ்சகிருத்தியங்களை நடாத்துதல்

கூறப்படுகின்றது. ஊசற்பருவம் ஏழாம் செய்யுளில் சத்தி, ஆதார பதுமங்களில் மின்னரூபமாய் அமர்ந்திருத்தல் குறிப்பிடப்படுகின்றது.

தலபுராணம்: தோத்திர நூல்களில் அவ்வத்தலத்தின் புராணவரலாறுகள் இடம் பெறுதல் இன்றியமையாதது. இத்தலத்திற்குத் தலபுராணம் உண்டு. அதுகொட்டையூர்ச் சிவக்கொழுந்து தேசிகரால் ஐந்நூற்று முப்பத்து மூன்று செய்யுட்களாக இயற்றப்பெற்று, முன்பேஅச்சாகியுள்ளது. அதில் உள்ள வரலாறுகளும் இதில் ஆங்காங்குக் குறிக்கப் பெறுகின்றன,

அம்புலிப் பருவத்தில். சந்திரனைநோக்கி, 'இத்தலத்தில் உள்ள இவ்வம்மை இங்குள்ள பஞ்சாக்கரத் தீர்த்தக் கரையில் நின்று, ஞானசம்பந்தர் திருமணத்திற்கு வந்த பலரது பாசங்களாகிய களங்கமெல்லாம் நீங்கும்படி திருவெண்ணீறு அளித்தாள் என்றால், நீ ஒருவன் இவளிடம் வந்தால் உனது களங்கம் நீங்கும்படி திருவெண்ணீறு அளிக்கமாட்டாளோ என்று கூறும் முறையில் அமைத் திருத்தல், கண்டு இன்புறத்தக்கது.

தியானம்: இப்பிள்ளைத்தமிழின் இறுதிச் செய்யுளில்' அம்பிகையைத் தியானித்தற்குரிய தியானப்பாடலாக அமையும்படி, அவளைப் பாதாதிகேசாந்தம் நன்கு வருணித்து முடித்திருத்தல், அம்பிகையின் அருளைப்பெற விரும்புவோர் பலர்க்கும் பெரிதும் பயன் தருவதாகும்.

திருப்பெருமணநல்லூர் மகாகும்பாபிஷேக விழா மலராக, அத்தலத் தேவாரத் திருப்பதிகங்களையும், திரு வெண்ணீற்றுமை பிள்ளைத்தமிழையும் பதிப்பிக்கும்

பணியை, ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் அடியேனுக்குப் பணித்தருளினார்கள். அவர்கள் அருளாணை யின்வழி மலரும் இம்மலர், அனைவரும் திருப்பெருமணத்து அம்மையப்பர் திருவடிகளில் ஏற்றிப் போற்றி உய்தி பெறுதற்கு உரியதாகும். இதனை அனைவரும் பெற்று ஓதி உணர்ந்து, நல்லூர்ப்பெருமணத்து இறைவன் நல்லருள் பெற்று உய்வார்களாக.

இந்நல்லருட் பணியில் அடியேனை ஈடுபடுத்தத் திரு வுளம்பற்றி அருளாணை வழங்கியருளிய, ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களது திருவடிகளுககு எனது மன மொழி மெய்களாலாகிய பெருவணக்கம் உரியதாகின்றது.

இங்ஙனம்,

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள்
அருளாணையின் வண்ணம்,

அடியேன்,

தருமையாதினம்,
*29—4—1964.*

சி. அருணைவடிவேல்.

உ

சிவமயம்

# திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரத் திருப்பதிகங்கள்

## திருநல்லூர்ப்பெருமணம்

வரலாறு : சோழநாட்டில், சிகாழிப் பதியில், அந்தணர் குலத்தில், கவுணிய கோத்திரத்தில், 'சிவபாதவிருதயர், பகவதியார்' என்னும் இருவர்க்கும், அவர்கள் பல நாட்கள் தோணியப்பரை வழிபட்டுவந்ததன் பயனாக, திருமகனாராய்த் திருவவதாரம் செய்தருளி, மூன்றுவது வயதிலே இறைவி தந்த ஞானப்பாலை உண்டு, அப்பொழுதே எல்லாக் கலைஞானங்களையும் ஓதாதுணர்ந்து, அடைதற்கரிய அனுபவ ஞானத்தையும் அடைந்தருளிய திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார், பின்னும் சிவபெருமான், முத்துச் சிவிகை முத்துச் சின்னம் முதலியவைகளை வழங்கியருளப்பெற்றுத் தமிழ்நாடு எங்கும் யாத்திரை புரிந்து, செந்தமிழ்த் திருப்பதிகங்கள் பலவற்றை; அருளிச்செய்து, உபநயன காலத்தில், " செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்கு அந்தியுள் மந்திரம் அஞ்செழுத்துமே " என்னும் உண்மையை அறிவுறுத்தி, ஆங்காங்குப் பல அற்புதங்களை நிகழ்த்தி, மதுரையில் பாண்டிய மன்னனைச் சைவனாக்கி, அங்குச் சைவ சமயம் தழைத்தோங்கச்செய்து, பாண்டிநாட்டு யாத்திரை

யில் திருஇராமேச்சுரத்தில் இருந்து ஈழநாட்டில் உள்ள தலங்களேயும், தொண்டைநாட்டு யாத்திரையில் திருக் காளத்தியில் இருந்து, தமிழ்நாட்டிற்கு அப்பால் திருக் கயிலே வரையில் உள்ள தலங்களேயும் எதிர்நோக்கித் தொழுது திருப்பதிகங்கள் அருளிச்செய்து, திருமயிலாப் பூரில் எலும்பைப் பெண்ணுக்கி, மீண்டு வந்து சீகாழியில் இருக்கும்பொழுது, பெற்ருேரும் மற்ருேரும், 'நீர் வேத நெறி தழைத்தோங்க வந்தமையால் அதைச்செய்து காட்டு தற் பொருட்டுத் திருமணஞ் செய்துகொள்ள வேண்டும்' எனப் பலவாறு வேண்டினர். ஞானசம்பந்தரும் அதற்கு ஒருவாறு உடன்பட்டருளினுர். திருநல்லூரில் (ஆச்சாள் புரத்தில்) நம்பாண்டார் நம்பிகள் மகளே மணம்பேசி அங்கே திருமணம் ஏற்பாடாயிற்று. திருநீலநக்க நாயனுர், முருக நாயனுர் முதலிய பெரியோர் பலரும் வந்து குழுமினர். திருநீலநக்க நாயனுர் முறைப்படி சடங்குகளேச் செய்யத் திருமணம் இனிது நிகழ்ந்தது. முடிவில் வேள்வித் தீயை வலம்செய்யவேண்டி வந்த பொழுது, மதுமலர்நற் கொன் றையான் அடியலாற் பேணுத ஞானசம்பந்தர், 'வேள்வித் தீயாய் இருப்பவன் சிவபெருமானே ஆதலால், அவனேயே வலம்புரிவேன்' என்று, 'திருப்பெருமணம்' என்னும் அத்தலத் திருக்கோயிலே நோக்கிச் சென்ருர். திருமணத் திற்கு வந்திருந்த பலரும் அவர்பின் சென்றனர். ஞான சம்பந்தர், கோயிலுக்குத் தாம் தனியே செல்லாது காதலி யாரைப் பிடித்த கையோடே செல்ல நேர்ந்தமை கருதி, 'இந்த இல்வாழ்க்கைப் பந்தம் வந்து பற்றிக்கொண்டதே; இனி, இவ்வுலகில் இருப்பின் இப் பந்தந்தான் மேலிடும்; ஆதலின், இவளோடு இப்பொழுதே எம் பெருமானது திருவடியை அடைவேன்' என்று நினேத்து, அப்பேற்றில் ஆர்வம் பெரிதும் பொங்கி எழ, 'சிவபெருமான் தனது

அடியார்களுக்குப் பிறவிக்குக்காரணமான பாசத்தை அறுத் தருளுபவன்' என்பதை வெளிப்படைப் பொருளாக அமைத்து, 'தம்மை அவன் திருவடியில் சேர்த்துக்கொள்ளு தற்குரிய சமயம் இதுவே' என்னும் திருக்குறிப்போடு இத்திருப்பதிகத்தை அருளிச்செய்தார்.

பண் – அந்தாளிக் குறிஞ்சி

**திருச்சிற்றம்பலம்**

கல்லூர்ப் பெருமணம் வேண்டா கழுமலம்
பல்லூர்ப் பெருமணம் பாட்டுமெய் யாய்த்தில
சொல்லூர்ப் பெருமணம் சூடல ரேதொண்டர்
நல்லூர்ப் பெருமணம் மேயநம் பானே. 1

---

*1.* **பொழிப்புரை:-** திருநல்லூரில், 'திருப்பெருமணம்' என்னும் திருக்கோயிலை விரும்பி எழுந்தருளியுள்ள சிவ பெருமானே, யான், மணம்செய்துகொண்டமையால் வாழும் வாழ்க்கையை மேற்கொண்டால், திருக்கழுமலம் (சீகாழி) முதலிய பல தலங்களிலும் பெரிதும் பொருந்தியுள்ள என் பாட்டுக்கள் மெய்யாயினவில்லை என்று சொல்லி அடியார் கள், சொல்மாலைகளாகிய அவற்றைச் சூட நினையார்; ஆதலின், அம்மி மிதித்தல் முதலிய சடங்குகளால் முறைப் படி செய்துகொண்ட இப் பெரிய மணவினையின் பயனாகிய வாழ்க்கை எனக்கு வேண்டா.

'மணப் பாட்டு' என்பது மெலிந்து நின்றது. 'சொல் லூர்ப் பெருமணம்' என்பதில், 'ஊர்ப் பெருமணம்' என்பது, 'மிக்கு வீசும் பெரிய நறுமணத்தையுடைய மாலை' எனப் பொருள் தந்தது.

தருமண லோதஞ்சேர் தண்கடல் நித்திலம்
பருமண லாக்கொண்டு பாவைநல் லார்கள்
வருமணங் கூட்டி மணஞ்செயும் நல்லூர்ப்
பெருமணத் தான்பெண்ணோர் பாகங்கொண் டானே. 2

அன்புறு சிந்தைய ராகி யடியவர்
நன்புறு நல்லூர்ப் பெருமண மேவிநின்
றின்புறு மெந்தை யிணையடி யேத்துவார்
துன்புறு வாரல்லர் தொண்டுசெய் வாரே. 3

---

*2.* **பொ - ரை :-** *புன்னை முதலிய மரங்கள் உள்ள கரையில் அலைகள் வந்து வீசுகின்ற குளிர்ந்த கடலின் முத்துக்களையே பருமணல்களாகக்கொண்டு சிறுமியர்கள் மணத்துக்குரிய இல்லத்தை அமைத்து, தங்களுக்குள் மணஞ்செய்து விளையாடுகின்ற திருநல்லூரில், 'திருப் பெருமணம்' என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள சிவபெருமான், மங்கை ஒருத்தியைத் தனது திருமேனியின் ஒருபாகத்தில், கொண்டுள்ளான்.*

*'சிறுமியர் விளையாட்டுப்போல, இஃது அவன் அருள் விளையாட்டு' என்றபடி. சிவபிரானை மாதொரு பாகனுக நினைவார்க்கு மாதர் மையல் நீங்கும் என்பது, இத் திருப் பாடலால் விளங்கும்.*

*3.* **பொ - ரை :-** *அடியார்கள், அன்பு பொருந்திய மனத்தை உடையவர்களாய், அதன் பயனாக நன்மையைப் பெறுகின்ற திருநல்லூர்த் திருப்பெருமணத்தையே விரும்பி எழுந்தருளி மகிழ்கின்ற எம் தந்தையாகிய சிவபெருமானது இரண்டு திருவடிகளையும் துதிப்பவர்கள், பிறவித் துன்பத்தை அடைவாரல்லர்; அவனது திருவடியை அடைந்து அவனை வழிபட்டிருப்பார்கள்,*

*நன்பு - நன்மை; வீடு.*

வல்லியந் தோலுடை ஆர்ப்பது போர்ப்பது
கொல்லியல் வேழத் துரிவிரி கோவணம்
நல்லிய லார்தொழு நல்லூர்ப் பெருமணம்
புல்கிய வாழ்க்கையெம் புண்ணிய னார்க்கே. 4

ஏறுகந் தீர்இடு காட்டெரி யாடிவெண்
ணீறுகந் தீர்நிரை யார்விரி தேன்கொன்றை
நாறுகந் தீர்திரு நல்லூர்ப் பெருமணம்
வேறுகந் தீர்உமை கூறுகந் தீரே. 5

---

*4,* பொ - ரை :- மெய்யுணர்வுடைய பெரியோர் வணங்குகின்ற திருநல்லூர்த் திருப்பெருமணத்தில் எழுந்தருளியிருக்கும் வாழ்க்கையையுடைய புண்ணிய வடிவினராகிய எங்கள் பெருமானுர்க்கு, விரித்துக் கோவண வடிவில் உடையாக உடுத்துக்கொள்ளப்படுவது புலித் தோல்; போர்த்துக்கொள்ளப்படுவது, கொல்லும் தன்மை வாய்ந்த யானையின் தோல்.

இவை, பாசத்தை அறுக்கும் குறிப்பினவாம்.

5. பொ - ரை :- திருநல்லூரில் திருப்பெருமணக் கோயிலைச் சிறப்பாக விரும்பிய பெருமானிரே, நீர், ஏறுவதற்கு எருதையே விரும்பினீர்; பூசிக்கொள்வதற்கு, புறங்காட்டில் தீயில் நின்று ஆடி, அதன்கண் உண்டாகிய வெள்ளிய சாம்பலையே விரும்பினீர்; சூடுதற்கு, வரிசையாகப் பொருந்திய, மலர்ந்த கொன்றை மலர் மணங்கமழ்தலையுடைய மாலையை விரும்பினீர்; மேனியில் ஒருபாகமாக உமையை விரும்பினீர்,

இவையெல்லாம் எதற்கு? அவரவர்க்கு ஏற்றவாற்றுல் அவ்வப்பொழுது அருள் செய்வதற்கே யன்றோ?

சிட்டப்பட் டார்க்கெளி யான்செங்கண் வேட்டுவப்
பட்டங்கட் டுஞ்சென்னி யான்பதி யாவது
நட்டக்கொட் டாட்டரு நல்லூர்ப் பெருமணத்
திட்டப்பட் டாலொத்தி ராலெம் பிரானிரே. 6

மேகத்த கண்டன்எண் தோளன்வெண் ணீற்றுமை
பாகத்தன் பாய்புலித் தோலொடு பந்தித்த
நாகத்தன் நல்லூர்ப் பெருமணத் தான்நல்ல
போகத்தன் யோகத்தை யேபுரிந் தானே. 7

---

6, பொ - ரை :- எம் பெருமானிரே, 'நல்லொழுக்கத்தில் நிற்பவர்க்கு எளியவனும், வேட்டுவர்க்கு உரிய பட்டத்தை யணிந்த நெற்றியை உடையவனும் ஆகிய சிவபெருமானுக்கு உரிய ஊராவது, நடனத்திற்கு அமைந்த வாச்சிய முழக்கங்களும், அவற்றிற்கு ஏற்ப ஆடும் ஆடல்களும் நீங்காதிருக்கின்ற திருநல்லூரே' என்று சொல்லுமாறு, 'திருப்பெருமணம்' என்னும் கோயில் ஒன்றையே விரும்பினீர்போல அதன்கண் நீங்காது எழுந்தருளியிருக்கின்றீர்.

'ஆதலின், அதனை அடைந்த எனக்கு அருள்செய்தல் வேண்டும்' என்றபடி. வேட்டுவப் பட்டங்கட்டிப் புறப்பட்டது, அருச்சுனன் பொருட்டு.

7. பொ - ரை :- மேகம்போலும் கரிய கண்டத்தையும், எட்டுத் தோள்களையும், திருவெண்ணீற்றுமை பாகத்தையும், பாய்கின்ற புலியின் தோலோடு சேர்த்துக் கட்டிய பாம்பையும் உடையவனும், திருநல்லூரில், 'திருப்பெருமணம்' என்னும் கோயிலில் எழுந்தருளியிருப்பவனும்

தக்கிருந் தீர்அன்று தாளால் அரக்கனை
உக்கிருந் தொல்க உயர்வரைக் கீழிட்டு
நக்கிருந் தீர்இன்று நல்லூர்ப் பெருமணம்
புக்கிருந் தீர்எமைப் போக்கரு ளீரே, 8

ஏலுந்தண் டாமரை யானு மியல்புடை
மாலுந்தம் மாண்பறி கின்றிலர் மாமறை
நாலுந்தம் பாட்டென்பர் நல்லூர்ப் பெருமணம்
போலுந்தங் கோயில் புரிசடை யார்க்கே. 9

---

*ஆகிய சிவபெருமான், உயிர்கட்கு இன்ப நுகர்ச்சியையும், விடுபேற்றையும் அமைத்திருக்கின்றான்.*

*ஆதலின், யான் வேண்டும் விடுபேற்றை எனக்கு அளித்தல் திண்ணம்.*

8. **பொ - ரை :-** *எஞ்ஞான்றும் மேலான தகுதியைப் பெற்றிருப்பவரே, முன்பு ஒருகாலத்தில் அரக்கனாகிய இராவணனை அவன் மெலிவடையுமாறு, உயர்ந்த கயிலைமலையின்கீழ்க் கிடத்தித் திருவடியால் நெரித்தவண்ணம் இருந்து, பின்பு அவன் அழுதபொழுது சிரித்துக்கொண்டு இருந்தவரே, இக்காலத்தில் திருநல்லூரில், 'திருப்பெருமணம்' என்னும் திருக்கோயிலிற் புகுந்து, அதன்கண் நீங்காது எழுந்தருளியிருப்பவரே, எமக்கு இவ்வுலகத்தை விட்டுப் போம்வழியை அருளுவீர்.*

9. **பொ - ரை :-** *'புரித்த சடையையுடையவராகிய சிவபெருமானார்க்குப் பெருமையாவது, ஏற்புடையதண்ணிய*

**ஆதர் அமணொடு சாக்கியர் தாஞ்சொல்லும்**
**பேதைமை கேட்டுப் பிணக்குறு வீர்வம்மின்**
**நாதனை நல்லூர்ப் பெருமண மேவிய**
**வேதன தாள்தொழ வீடெளி தாமே. 10**

---

தாமரை மலரில் இருக்கும் பிரமனும், அவனைப்போலும் காரணக் கடவுளாம் இயல்புடைய திருமாலும் தேடி அறியாது நின்றமை' என்றும், 'தமது' பாட்டாவன, பெருமைபொருந்திய வேதங்கள் நான்கும்' என்றும், தமது கோயிலாவது, திருநல்லூரில் உள்ள திருப்பெரு மணம்' என்றும் அறிந்தோர் கூறுவர்.

அதனால், இக்கோயிலில் இருந்து எமக்கு அருள்புரிதல் ஒருதலை.

*10.* **பொ - ரை :-** அறிவில்லாராகிய சமணரும் சாக்கியரும் சொல்லும் பேதைமைச் சொல்லைக் கேட்டு, 'இறைவன் இல்லை' என்று பிணங்குகின்றவர்களே, வாருங்கள்; யாவர்க்கும் தலைவனும், நல்லூரில், 'திருப்பெருமணம்' என்னும் திருக்கோயிலில் விரும்பி எழுந்தருளியிருக்கும் வேத முதல்வனும் ஆகிய சிவபெருமானது திருவடிகளைத் தொழுதால் வீடுபேறு எளிதில் கிடைப்பதாகும்.

இதன்படி சென்று வணங்கினவர்க்கு எளிதில் வீடு கிடைத்தமை அறிக.

நறும்பொழிற் காழியுள் ஞானசம் பந்தன்
பெறும்பத நல்லூர்ப் பெருமணத் தானை
உறும்பொரு ளாற்சொன்ன ஒண்டமிழ் வல்லார்க்
கறும்பழி பாவம் அவல மிலரே. 11

**திருச்சிற்றம்பலம்**

---

*11.* பொ - ரை :- நறுமணம் பொருந்திய சோலைகளை யுடைய சீகாழியில் தோன்றிய ஞானசம்பந்தன் வீடு பெறுங் காலத்து, திருநல்லூரில் திருப்பெருமணத் திருக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானை அடையும் கருத்தோடு பாடிய இந்த ஞானத்தமிழ்ப் பாடலை இசை வழுவாது பொருளுணர்ந்து அன்போடு பாடவல்லவர்க்குப் பழியும் பாவமும் நீங்கும்; அவர், பிறவித்துன்பமும் இலராவர்.

# நமச்சிவாயத் திருப்பதிகம்

வரலாறு: 'சிவபெருமானது திருவடியை இப்பொழுதே அடைய வேண்டும்' என்னும் திருக்குறிப்புடன் திருஞானசம்பந்தர், 'கல்லூர்ப் பெருமணம்' என்னும் திருப்பதிகத்தை அருளிச் செய்தபொழுது, சிவபெருமானும், அவர் வேண்டியவாறே அவருக்கு அருள்புரிகின்றவராய், 'நீயும் உன் காதலியும் மட்டுமன்றி உன் திருமணத்திற்கு வந்தவர் அனைவரும் இச் சோதிவழியாக என்னிடத்து வந்து சேர்க' என்று சொல்லி, கோயிற் கோபுரம் முதலிய எல்லாவற்றையும் உள்ளடக்கி வானளாவ எழுந்த ஒரு பெருஞ்சோதியை உண்டாக்கி, அதன் நடுவே வாயில் ஒன்றையும் வகுத்துக் காட்டினர். ஞானசம்பந்தர் அந்தச் சோதியை வணங்கித் துதித்து, இறுதியாக, அங்கு வந்திருந்தவர்கட்கும், மற்றையோர்க்கும் முடிந்த உண்மையை அருளிச்செய்யக் கருதி, "எப்படிப்பட்டவர்க்கும் உண்மையான ஞானத்தைத் தருவது, 'நமச்சிவாய' என்னும் திருவைந்தெழுத்து மந்திரமே" என்று தெரிவிக்கின்ற இத் திருப்பதிகத்தை, விண்ணுலகத்தாரும், மண்ணுலகத்தாரும் கேட்க அருளிச்செய்தார்.

பண் – கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொரு ளாவது
நாதன் நாம நமச்சி வாயவே. 1

---

1. பொழிப்புரை :- உள்ளம் பேரன்புடையதாய்க் கசிந்துருகவும், கண்கள் நீரைப் பெருக்கவும் நின்று ஓதுகின்றவர்களை ஞான நெறியில் செலுத்துவதும், நான்கு

நம்பு வாரவர் நாவி னவிற்றிஞல்
வம்பு நாண்மலர் வார்மது வொப்பது
செம்பொ ஞர்தில கம்முல குக்கெலாம்
நம்பன் நாம நமச்சி வாயவே. 2

நெக்கு ளார்வ மிகப்பெரு கிங்கினேங்
தக்கு மாலைகொ டங்கையி லெண்ணுவார்
தக்க வானவ ராத்தகு விப்பது
நக்கன் நாம நமச்சி வாயவே. 3

---

வேதங்களிலும் முடிவாய் உள்ள பொருளை உடையதும், எல்லார்க்கும் தலைவனுகிய சிவபெருமானது திருப்பெயராகிய, 'நமச்சிவாய' என்னும் மந்திரம் ஒன்றே.

2. பொ-ரை :- கடவுளிடத்து அன்பு செலுத்துபவர் தங்கள் நாவில் எப்பொழுது சொன்னுலும் அப்பொழுது மலர்ந்த மலரினின்றும் ஒழுகுகின்ற தேன்போல இனிமையை உண்டாக்குவதும், உலகில் உள்ளவர்க்கெல்லாம் செம்பொன் திலகம்போல நின்று சிறப்பைத் தருவதும், சிவபெருமானது திருப்பெயராகிய, 'நமச்சிவாய' என்னும் மந்திரம் ஒன்றே.

3. பொ-ரை :- உள்ளம் நெகிழ்ந்து, அன்பு மிகப் பெருகி நினைந்து, அகங்கையில் உருத்திராக்க மாலையைக் கொண்டு கணிப்பவர்களை (செபிப்பவர்களை) மேலான தேவர் ஆகும் தகுதியை அடைவிப்பது, சிவபெருமானது திருப்பெயராகிய, 'நமச்சிவாய' என்னும் மந்திரம் ஒன்றே.

இயமன் தூதரும் அஞ்சுவர் இன்சொலால்
நயம்வந் தோதவல் லார்தமை நண்ணினுல்
நியமந் தான்நினை வார்க்கினி யான்நெற்றி
நயனன் நாம நமச்சி வாயவே. 4

கொல்வா ரேனுங் குணம்பல நன்மைகள்
இல்லா ரேனும் இயம்புவ ராயிடின்
எல்லாத் தீங்கையும் நீங்குவ ரென்பரால்
நல்லார் நாம நமச்சி வாயவே. 5

மந்த ரம்மன பாவங்கள் மேவிய
பந்த னையவர் தாமும் பகர்வரேல்
சிந்தும் வல்வினை செல்வமும் மல்குமால்
நந்தி நாம நமச்சி வாயவே. 6

---

4. பொ - ரை:- நாள்தோறும் கட்டளையாகத் தன்னை நினைக்கின்றவர்கட்கு இன்பத்தைச் செய்பவனும், நெற்றிக் கண்ணை உடையவனும் ஆகிய சிவபெருமானது திருப் பெயராகிய, 'நமச்சிவாய' என்னும் மந்திரத்தை, அன்பு வரப்பெற்றுச் சொல்லவல்லவர்களை எதிர்ப்பட்டால், எமனது தூதுவரும் அச்சங்கொண்டு இன்சொற் சொல்லி நீங்குவர்.

5. பொ - ரை:- 'குலமுறையால் உயிர்க்கொலை செய்பவராயினும், குணத்தினல் நன்மைகள் பலவும் இல்லாதவராயினும், நல்லோர் சொல்லுதற்குரிய பெயராகிய, 'நமச்சிவாய' என்னும் மந்திரத்தை அன்பினுல் சொல்வாராயின், அத்தீமைகள் அனைத்தையும் இல்லாதவரே யாவர்' என்று அறிந்தோர் சொல்லுவர்.

6. பொ - ரை:- மந்தரமலைபோன்ற பாவங்களில் அகப்பட்ட பிணிப்புடையவரும், சிவபெருமானது திருப்

நரகம் ஏழ்புக நாடின ராயினும்
உரைசெய் வாயின ராயின் உருத்திரர்
விரவி யேபுகு வித்திடும் என்பரால்
வரதன் நாம நமச்சி வாயவே. 7

இலங்கை மன்னன் எடுத்த அடுக்கல்மேல்
தலங்கொள் கால்விரல் சங்கரன் ஊன்றலும்
மலங்கி வாய்மொழி செய்தவன் உய்வகை
நலங்கொள் நாம நமச்சி வாயவே. 8

---

பெயராகிய, 'நமச்சிவாய' என்னும் மந்திரத்தைச் சொல்வாராயின், அப்பாவங்கள் அனைத்தும் அழியும்; செல்வமும் பெருகும்.

7. **பொ - ரை :-** நரகங்கள் எல்லாவற்றிலும் வீழ்வதற்குரிய பாவங்கள் எல்லாவற்றையுமே ஆராய்ந்து செய்தவராயினும், வரத்தைக் கொடுப்பவனாகிய சிவபெருமானது திருப்பெயராகிய, '**நமச்சிவாய**' என்னும் மந்திரத்தைச் சொல்லுகின்ற வாயினை உடையவராயின், அது, சிவனது வடிவையும் தொழிலையும் பெற்று விளங்கும் உருத்திரர்களோடு சேருமாறு சேர்த்துவிடும்.

8. **பொ - ரை :-** இலங்கை யரசனாகிய இராவணன் பெயர்த்த கயிலாய மலையின்மேல், அதனை இடமாகக் கொண்டிருக்கும் சிவபெருமான் தனது கால் விரல்களுள் ஒன்றைச் சிறிது ஊன்றிய உடன், அவ்விராவணன் மனங் கலங்கி தனது வாயால் துதித்தலைச் செய்தவனாய், உய்யும் வகையாகிய நன்மையைப் பெறுவதற்குத் துணையாய் இருந்த திருப்பெயர், '**நமச்சிவாய**' என்னும் மந்திரமே.

போதன் போதன கண்ணனும் அண்ணல்தன்
பாதந் தான்முடி நேடிய பண்பராய்
யாதுங் காண்பரி தாகி அலந்தவர்
ஓது நாம நமச்சி வாயவே. 9

கஞ்சி மண்டையர் கையில்உண் கையர்கள்
வெஞ்சொல் மிண்டர் விரவில ரென்பரால்
விஞ்சை அண்டர்கள் வேண்ட அமுதுசெய்
நஞ்சுண் கண்டன் நமச்சி வாயவே. 10

---

*9.* பொ - ரை :- *தாமரை மலரில் உள்ள பிரம தேவனும், தாமரை மலர்போன்ற கண்களையுடைய திருமாலும், சிவபெருமானது அடியையும் முடியையும் அளவிடத் துணிந்த செருக்கினை யுடையவர்களாய்த் தேடி, அவற்றுள் ஒன்றும் சிறிதும் அவர்களால் காண்பதற்கு அரிதாய்விட, அவர்கள் துன்புற்று, ஓதி உய்ந்த திருப் பெயர், '*நமச்சிவாய*' என்னும் மந்திரமே.*

*10.* பொ - ரை :- *'கஞ்சியை,' 'மண்டை' என்னும் மண் பாத்திரத்தில் உண்ணும் ஒழுக்கத்தினை உடைய புத்தர்களும், அதுவும் இன்றிக் கையிலே உண்ணும் ஒழுக்கத்தையுடைய சமணர்களும், 'இறைவன் இல்லை' என்று வாதிக்கும் கொடிய சொற்களையுடைய மூர்க்கர்களாதலின், பல வன்மைகளையுடைய தேவர்கள் வேண்ட, அவர்களுக்கு அமுதத்தைத் தந்த, நஞ்சினை உண்ட கண்டத்தையுடைய சிவபெருமானது திருப்பெயராகிய, '*நமச்சிவாய*' என்னும் மந்திரத்தை அவர்கள் ஏற்றுக்கொள்கிலர்' என்று அறிந்தோர் சொல்லுவர்.*

*நீவிர் அவ்வாறிருத்தல் வேண்டா.*

நந்தி நாம நமச்சிவா யவ்வெனும்
சந்தை யாற்றமிழ் ஞானசம் பந்தன்சொல்
சிந்தை யான்மகிழ்ந் தேத்தவல் லாரெலாம்
பந்த பாச மறுக்கவல் லார்களே. 11

திருச்சிற்றம்பலம்

---

*11.* பொ - ரை :- சிவபெருமானது திருப்பெயராகிய, 'நமச்சிவாய' என்னும் மந்திரத்தைப் பொருளாகக் கொண்டு பாடிய, தமிழ் ஞானசம்பந்தனது பாடலை அன்போடு மகிழ்ந்து பாடவல்லவர் எல்லாரும் பாசப்பிணிப்பை அறுத்துக்கொள்ள வல்லவராவார்கள்.

அங்ஙனமே இத்திருப்பதிகத்தைக் கேட்டவர்கள் பாச பந்தம் அற்று விடுபெற்றவாறு அறிக.

உ

சிவமயம்

திருப்பெருமண நல்லூர்த்

# திருவெண்ணீற்றுமை பிள்ளைத்தமிழ்

பாயிரம்

காப்பு

## வழித்துணை விநாயகர்

பொன்பூத்த முக்குணப் புத்தேளிர் முதலெனப்
புவியகத் தேவருமுணரப்
பொலிஒரு பிறைக்கோடும் அருள்மேனி யும்பொழிசு
போலக் கடாமும்நாளும்
கொன்பூத்த வெண்மையுஞ் செம்மையுங் கருமையுங்
கோப்புளிக்கக் கருணையே
கொழித்தமர் வழித்துணைக் குஞ்சரத் தஞ்சரண
கோகனக மாகநுகவே
மென்பூத்த கொன்றைச் சடைப்பரன் வலத்துவிழி
வேள்ளென விடத்துமருவும்
விழிசா ரேனச்செய்ய வாயினேழு குறுமூரல்
வேண்ணிலவு தவழுந்தோறுந்
தேன்பூத்த அதின்முழுகி மேற்பழுப் பொழியுந்
திறங்கருதி முக்கணியெனத்
திகழ்முத்த மேவவமர் மணவைவேண் ணீற்றுமை
செழுந்தமிழ்க் கவிதழையுமே. 1

ஆளுடைய பிள்ளையார்

பாழிமிகு வைதிகஞ் சைவந் தழைப்பப்
பசித்தழுத பனவரேற்றைப்
பாவுபர ஞானஇன் பாலருச் செய்யவாய்ப்
பரசமய கோளரியைவண்
காழிவரும் ஒருமுத் தமிழ்க்கடாம் பொழிமழ
களிற்றைவே தக்கொழுந்தைக்
கவுணியக் கன்றைநற் கற்புநிறை பொற்புமலி
காதலி யோடுந்துதிப்பாம்
ஆழியிறை வற்குவெவ் விடமுதவு தன்பிழை
அகற்றிஉய் வான்குறித்தாங்
களவில்வெண் பணிலமுந் தரளமும் பவளமும்
அம்பொன்னும் மணியும்நாளும்
வாழிநெடு வெண்டிரைக் கையேந்தி வந்துதூய்
வழிபட விளங்குதெய்வ
மணவைவெண் ணீற்றுமை யணங்குக் கிணங்குதமிழ்
மாலையுயர் பாலையுறவே. 2

## 1. காப்புப் பருவம்

திருமால்

மாமேவு பல்லுயிரும் வாழஅணை தற்குரிமை
மந்தா கினிக்கில்லெனம்
மார்பினுக் கேயுள்ள தென்றுகுறி இட்டதென
மறைகூறு குறிகடந்தோன்

பூமேவு மார்பிறேண் முலைக்குறி அமைத்துமகிழ்
புண்ணியக் கொம்பைஎவரும்
போற்றுமண வைத்திருவெண் ணீற்றுமை
யெனப்பொலி
பொலங்கொடியை இனிதுகாக்க
காமேவு பெருலகில் ஆருயிர்ப் பயிரெலாங்
கலிவெப் பொழிந்துதழைவான்
கடையரிய தடையிடையில் அடைவரிய பெரியதண்
கருணைமழை பொழியநாளுஞ்
தேமேவு பங்கயச் செல்வியக லொண்கட்
செழும்பரவை யுட்படிந்து
திதலைகொண் டெழுமணியள் கொங்கைப் பொருப்பிற்
செறிந்துவளர் பச்சைமாலே. 1

சிவலோகத் தியாகர்

தேமலி கடுக்கைநதி ஆரறுகு கொக்கிறகு
சீறரவு பூமத்த மாமுடிச் சாத்தினர்
தேடும்இரு வர்க்கரிய ராகியும் உரைக்கரிய
சீர்கொள்முதல் நூல்பற்றி யாய்பொதுக்
கூத்தினர்
தீர்வரிய மத்தஇனி தாஅரு ளெனப்பல்பல
தேவர்பின் விடார்செப்பு நீள்துதிச் சொத்தினர்
தோரரு நிருத்தம்அக லாதுதரி சித்துவகை
சேரும்அர வோடுற்று வாழ்புலிப் பொத்தினர்
நாமலி புகழ்ச்சியை அவாவிஅடி யர்க்குறுதி
நாடியவர் பாலுற்ற தீமையைப் பாற்றுவர்
நானென தெனப்புகலும் ஊனம தறுத்துயரு
ஞானநெறி யோர்பெற்ற பேறெனக் கேற்றுவர்

நாம்அர னடிக்கடிமை யோமேன நினேப்பவரை
நாகஇமை யோருட் பராவிடத் தூற்றுவர்
நாடுதிரி யக்கரரு ளாளர்மண வைக்கிறைவர்
நாதர்சிவ லோகத் தியாகரைப் போற்றுவம்
மாமலி கதுப்பிஞெளி மேயதர ளப்பிறைவிண்
வாழுமுகில் மேலுற்ற ஓர்பிறைக் கேய்ப்புற
வாளவிரு முத்தவட ஞானநிறை வுற்றமுலே
மாறில்புக ழேயோத்து மீதுறப் போர்த்தேழ
மாமதி யகத்தினெழு சீதநில வோத்துமுக
வாய்முதிர் விலாசத்து வாளின்மேய்ப் பாற்
வாரிச மலர்ச்சரண நூபுர மோலித்தேழநன் [போலி
மாதவர்முன் மேவோப்பி லாஅருட் பார்ப்பனி
காமலி போருப்பின்மக ளாயஅனே முப்புவன
காரணி கலாசத்தி பூரணக் கார்க்குயில்
காதலகல் பித்தர்குண மேததுசெய் பத்தர்பிழை
காமருள மேவக் கோளாநலச் சூற்பிடி
கூவிமல ரோத்தவிழி ஓவியம் நிகர்த்தமயில்
காணுல கேலாமோத் தவாவுமேய்க் கீர்த்தியள்
காசில்கலே முற்றுமுணர் வோருமுன் மதிப்பரிய
காரிகை விபூதிக்கல் யாணியைக் காக்கவே. 2

பொய்யாத விநாயகர்

*வேறு*

கலர்மல வாய்ப்படு பேயருட் சேற்றுமோ
கமகல வேட்டமர் தூயர்மேய்ப் பாற்போலி
உலர்தலி ஞர்ப்பேரி யாருளக் சாட்டிடை
உலவுபோய் யாக்களி யானேயைப் போற்றுதும்

அலரமர் சீர்த்திரு மாதர்கட் கார்க்குயில்
அடியரை யேற்றிடு பேரளிப் பேட்டன
மலர்மலி நீர்த்தடம் வாரியோப் பாப்போலி
மணவைவெண் ணீற்றுமை யாள்தனைக் காக்கவே.

## முருகக் கடவுள்

*வேறு*

உணர்பெ ரும்புவன உயிரே னுங்குகையு
ளுறைத ருங்குகனை வேள்ளிவேற் பாத்தனுள்
உணர நன்குமோழி உணர்வி றந்த போருள்
உதவி நின்றஅருள் வள்ளலைக் கூர்த்துதீ
புணர்அன் நலங்கலயில் வலன யந்துபகை
போருது வேன்றவீற [1]லண்ணலைப் பூக்கமழ்
புனம டைந்திளைய குறம டந்தைமுலை
புணரு வந்தமயி லையனைப் போற்றுதும்
இணர்ப டுங்கனக தருவே முந்தமலர்
இலகு கோம்பரேன வள்ளிலைச் சூற்படை
இறைவன் நேஞ்சின்இனி தமர்ப சுங்கிளியை
எழில்க ணிந்தமட வேள்ளனப் பேட்டினை
வணர்சு றுங்குழலை மலைம ருந்தைஅருள்
வடிவை அம்பிகையை விள்ளிசைப் பாட்டளி
மருவு பைம்போழிலின் முகில்உ றங்குவள
மணவையேங்களுமை [2]யம்மையைக்
காக்கவே. 4

---

[1] 'மெய்யனை' என்பதும், [2] 'ஐயையை' என்பதும் வேறு பாடங்கள்.

## நான்முகன்

வேறு

வலமலியும் அத்திரஞ் சத்திர முதற்பல
வயப்படைக் குப்படையேனும்
வாக்கா யுதங்கொண்டு தான்கொண்ட வைதிகனன்
மாண்பினுக் கேற்பநாளும்
நலமலியும் வேண்மணி வடங்கையிற் றூங்கவேண்
ணகையனைய உருவமேனி
நாயகி மணந்துவேள் ளோதிமம் நடாத்துமொரு
நான்முகக் கடவுள் காக்க
உலமலியும் எண்டோட் பிரானைப் புணர்ந்துசேய்
ஒன்றீன்ற மோகினியெனும்
ஒருமாது மற்றவன் திருமடைப் பள்ளியகம்
ஒவா துறப்புரிந்து
குலமலியும் அனையநா யகனைநீங் காதுமகிழ்
கூர்ந்தமர்ந் துலகம்வாழக்
கோழிக்கும்அரு ளம்மையைச் சேம்மைநல்
லூர்க்குடிகோன்
கோமளக் கிளிமோழியையயே. 5

## இந்திரன்

முன்னுசுப் பிரமணியன் ஒமேன்று நன்றுமறை
முக்கா லுரைக்கமேவும்
முருகன்அரு மருகன்உவர் பருகுபுமேய் கருகுபுகழ்
முகில்புரையும் மேனிஅண்ணல்

மின்னுதன் பின்னேனப் பேற்றுவற் ருதகவுள்
வேள்ளவேள் ளானையூர்ந்து
விண்ணுளு மாயிரங் கண்ணுளு மேனியுடை
வேந்தன் பரிந்துகாக்க
பன்னுதிரு உதரமோர் வருந்துத லிலாதண்ட
பகிரண்ட முற்றுமீன்ற
பளகறு தனைப்போல மேனையுந் தனோஈன்று
பாய்புகழ் படைக்கும்வண்ணம்
மன்னும்அருள் புரிபசுங் கோம்பைவம் பைப்போரு
மதர்த்தமுலை தாங்கிஏங்கி
வாங்கிமேலி தருநுண் மருங்குலை நேருங்குவள
மணவைவேண் ணீற்றுமையையே. 6

திருமகள்

*வேறு*

பிறந்த மனையில் வாழ்க்கையிலர்
பேதைமாதர் என்னும்மோழி
பிழையே யாக மணிவண்ணப்
பேருமான் றனைத்தான் பிறந்தவளம்
உறந்த மனைவாய் ஆய்ப்பாடி
உறிப்பால் கரவிற் கவர்சிறுமை
ஒழியத் தாபித் துறுவாழ்க்கை
யுற்று மகிழ்மா மகட்பணிவாம்
மறந்த வாத மழுப்படைக்கை
வள்ளற் பேரியோன் தலைமதிதான்
மாறுக் கலக்கம் உறமுனியும்
மலர்த்தாள் எனினும் மறத்தோழிலிற்

சிறந்த சிறியேங் கடைமதிதான்
தீராத் தெளிவு பெறஉவக்குந்
திறத்தின் அமைக்குந் திருநல்லூர்ச்
செல்வக் கோடியைக் காக்கவேன்றே. 7

நாமகள்

தன்நா யகன்றன் மேனிநிறந்
தனைஒப் பாய நிறமலர்மேல்
தங்கல் போற்றன் மேனிநிறந்
தனைஒப் பாய நிறமலரும்
மன்னு நிறைவேள் ளறிவுடையேம்
வாக்குங் குடிகோண் டமர்கருணை
வண்மைப் பனுவ லாட்டிஇரு
மலர்த்தாள் தலையால் வணங்குவாம்
உன்னு நின்ற கங்கைமகள்
ஒடுங்கி அடங்கி ஏமாற
உம்பர் பெருமான் திருமேனி
ஒருபால் கவர்ந்தும் அமையாமே
முன்னு அனையன் திருவுள்ளம்
முழுதுங் கவர்ந்துள் ளிறுமாக்கும்
முத்த முரற் றிருமணவை
முதல்வி தன்னைக் காக்கவேன்றே. 8

சத்த மாதர்

பறைஒ திமமும் மறையும்இமிற்
பாழி ஏறும் பிணுகமும்போர்
பயிலும் மயிலும் அயிலும்வலி
படுபுள் ளரசுந் திகிரியுமோய்

உரைசீ யமும்வன் கலப்பையும்வேள்
ளோருகை வரையும் வச்சிரமும்
உழலும் பேயுஞ் சூலமுந்தம்
ஊர்தி படைசெய் எழுமாதர்
இறையோன் உள்ளத் தழகொழுக
எழுதி நோக்கும் ஓவியத்தை
எண்ணில் புவனம் ஒருங்கீன்றும்
இளமை வளமைப் பசுங்கிளியை
மறைஒ லிடும்பொற் றிருவடிஎன்
மனத்தும் பதிக்கும் அனத்தைநகு
மணநல் லூரின் வேண்ணீற்று
மயிலைப் பரிந்து காக்கவே. ௭

முப்பத்து முக்கோடி தேவர்

*வேறு*

சீதரன் மலர்த்தவி சிருக்கையன் இவர்க்கரிய
ஒப்பற்ற மெய்ச்சோதி பாதியுரு விற்போலி
தேவியை உருக்கிளர் முருக்கித ழிதழ்க்கிளியை
எப்பற்றும் அற்றருள் மேவிஅவ ருக்குறு
காதரம் அறுத்தவர் பவக்கடல் சுவற்றிமகிழ்
அப்பேற்றி மிக்காளை மூவிரு முகத்தொரு
காளையை மதக்கவு ளுடைக்கய முகத்தமர
ணைப்பெற்ற நற்றுயை மேதகு குணத்தியை
ஓதரத னச்சேழு வடத்தோடோளிர் முத்தவடம்
உற்றுச் சிறப்பேறு ஞானவமு தக்கடல்
ஊறுகல சத்துணை முலைத்துடி யிடைக்கொடியை
அற்புக் கினிப்பாளை ஆரரு ளொருத்தியை

ஆதரமிகப்பெரு மணத்துமே மனத்துமமர்
முத்திக்கு வித்தாய தாளுடைய சத்தியை
ஆதவர் உருத்திரர் மருத்துவர் வசுக்களேனு
முப்பத்து முக்கோடி தேவர்கள் புரக்கவே. 10

## 2. செங்கீரைப் பருவம்

நீர்பூத்த முப்பத் திரண்டறமும் ஓம்புபெரு
நிறைவின்மேல் நோக்கிமலரா
நீதிகீழ் நோக்கியே மலர்தலேன் றியாவரும்
நிகழ்த்துநின் இருகைமலரும்
ஏர்பூத்த புவியிற் பதித்தோரு முழந்தா
ளிருத்தியோர் முழந்தாளேடுத்
திரவிமண் டலமேன்ன இருகுதம் பைக்குழைகள்
எங்கும்வில் வீசியாடத்
தார்பூத்த முச்சியிற் கட்டிவிடு நித்திலத்
தண்மணிச் சுட்டியும்நலந்
தழையும்நுத லிற்போலிவேண் ணீறுமோண் டிலதமுந்
தளவனைய குறுமூரலுஞ்
சீர்பூத்த வேண்ணிலவு வீசிஆ டக்கவுரி
செங்கீரை ஆடியருளே
திருப்பெரு மணத்தமர் அருட்பெரு மணச்செல்வி
செங்கீரை ஆடியருளே. 1

பேசுபுகழ் சால்பேரும் புவனத்தில் ஆண்மகப்
பேறல் சிறப் பேன்றும்மற்றைப்
பேண்மகப் பேறல்அத் துணேச்சிறப் பன்றுதுயர்
பேற்றதோப் பாகுமேன்றும்

மாசுபடு துன்பமே பெண்ணுருவ மாய்எந்த
வைப்பினும் வருவதென்றும்
மதிக்கின்ஒரு மகவும்மக வாளென்றும் இங்ஙனம்
வகுத்துரைப் பார்களோடு
கூசுத லிலாதக மலர்ந்தாண் மகப்பெறுதி
குறைவுதப என்ருசிமுற்
கூறுங நம உள்ளம்நாண் கொள்ளஎள் ளப்படாக்
குவடுவான் அணவஓங்குந்
தேசுமலி பனிமலைக் கோருபுதல்வி யாயஉமை
செங்கீரை ஆடியருளே
திருப்பெரு மணத்தமர் அருட்பெரு மணச்செல்வி
செங்கீரை ஆடியருளே. உ

தையல்அர மாதர்முதல் யாருமோ கித்துத்
தழீஇக்கொளாத் தடைகருதியோ
தாமே விரைந்தின்னும் மோகினியை முன்போற்
றழீஇக்கொளல் விலக்கெண்ணியோ
வையமிசை அவரிடைத் தான்கொண்ட ஆர்வத்தை
மன்னுயிர்க் கறிவிக்கவோ
வயங்கருவம் எற்றிவர் இயங்குருவம் அற்றேனும்
மறைப்பொருளை வெளிசெய்யவோ
உய்யநெறி தருசைவ சித்தாந்தம் ஓதுமுடி
பொன்றியோன் ருமைஇற்றேன்
றுணர்த்தவோ உணர்வரிய உணர்வுருவ மாகியெம்
உணர்வொழித் துணருமொருவன்
செய்யதிரு மேனிஒரு பாதியமர் பைங்கிள்ளை
செங்கீரை ஆடியருளே
திருப்பெரு மணத்தமர் அருட்பெரு மணச்செல்வி
செங்கீரை ஆடியருளே. ௩

நிறைசுகுண மருவுநம் இருகண்மலர் இலமேன்று
நினையாமல் ஒன்றழிக்கும்
நிலவுநங் கையமரும் மலரேன்று நினையாமல்
நிதமுநிக ழோன்றழிக்கும்
மறைபுகலு நங்காமர் மேய்யில்ஒன் றிரவுபகல்
மாருத வேப்புறுத்தும்
மற்ருேன்று மாற்றவ ளோடுங்கூடி மற்றதை
வயக்கும்இவை யன்றிஇன்னுங்
குறைவரிய உவளகத் தும்புகூஉம் நாணம்நாம்
கோளஇரண் டுங்குடிகோளும்
குலவிவற் றின்றிறமை என்னைஅறி வாமேன்று
குன்றுமா றிருகதிரையுஞ்
சிறைசெய்த தேனஇறை முகக்கண புதைத்தபேண்
சேங்கீரை ஆடியருளே
திருப்பேரு மணத்தமா் அருட்பேரு மணச்சேல்வி
சேங்கீரை ஆடியருளே. 4

போருந்துபசி யால்விழி இரண்டும் பிசைந்தழு
புலிக்குருளை ஒன்றுவப்பப்
போங்குபா லாழியை அழைத்துக் கோடுத்தசிவ
புண்ணியன் புகழ்விளர்ப்ப
மருந்துநல் விருந்திஃ தருந்துக போருந்தவேன
மறையுணர வரியபேரிய
மாதேவன் வில்மணிக் குழைதழை சேவிக்கண்
மறைத்தமிழ் நிறைத்தூட்டுமா

குருந்துமழ களிற்ரேளி விளக்கெனச் சண்பையிற்
குலவுபர சமயசிங்கக்
குருளையு ளுவப்பமெய்ஞ் ஞானஇன் பால்முன்
கொடுத்தபைங் கோலமயிலே
திருந்துந லருந்தவ ருளம்புகு விளக்கமே
செங்கீரை ஆடியருளே
திருப்பெரு மணத்தமர் அருட்பெரு மணச்செல்வி
செங்கீரை ஆடியருளே. 5

*வேறு*

சூழிய முஞ்சிறு சுட்டியும் விட்டொளிர்
சோதி விரிந்தாடச்
சூடு துதிச்செவி நீடுங் குழையுந்
தோடும் அசைந்தாட
வீழி அவாவுசெவ் வாயின் எழுங்குறு
வெண்ணகை நிலவாட
வெள்ளிய பிறைநுத லென்பது மெய்யென
வெண்ணீற் றொளியாட
வாழிய வாழிய என்றுமு னின்று
வழுத்தும் பேரடியார்
மாறு அன்பெனும் வாரி குடைந்து
மகிழ்ந்தவர் சன்மமெனும்
ஆழிய ஆழி சுவற்று மடப்பிடி
ஆடுக செங்கீரை
அல்லூர் பொழிலமை நல்லூர் எழிலுமை
ஆடுக செங்கீரை. 6

நிறைதரு மம்பல உறைதரு கரமலர்
நிகழ்சிறு வண்டாட
நிலவெழு திருமுக மதிவா யூறல்
நிரம்புஞ் சுதையாடப்
பொறைதரு கருணையின் முழுகிய கயல்கள்
பொலிந்து புரண்டாடப்
புவனம் பலவு மடங்கிய உதரம்
பொற்பு மலிந்தாடக்
கறைதரு கண்டர் கருப்புவில் மாரற்
காய்ந்த துளத்தோர்ந்து
கரைதரு நும்வலி காண்குவல் இன்னே
காண்கென அறைவதுபோல்
அறைதரு சென்னி அசைந்தா டத்தனி
ஆடுக செங்கீரை
அல்லூர் பொழிலமை நல்லூர் எழிலுமை
ஆடுக செங்கீரை. 7

விண்ணலை பிறையுந் நிறையுந் துறையும்
மேவிய சடைஆட
மிளிர்பொன் ஆடையன் ஏத்துந் திருவரை
வெம்புலி உடைஆடக்
கண்ணலை நீரொடு நெக்குரு கன்பர்கள்
கைகள் குவித்தாடக்
காமரு கொன்றையொ டுந்தலை மாலை
கலந்து புயத்தாடப்

பண்ணலே யாமல் எழுப்பிசை வல்லவர்
பாடிசை யூடாடப்
பதிஞ லுலகும் அசைந்தா டக்கழல்
பற்று சிலம்பாட
அண்ணலே மன்றிடை ஆட்டுஞ் சூட்டனம்
ஆடுக செங்கீரை
அல்லூர் பொழிலமை நல்லூர் எழிலுமை
ஆடுக செங்கீரை. 8

வேறு

இகழ்தலில் தவமுயல் பவர்வினே நினேமுன்
இகந்தே நின்ருர்யாம்
இனேயம்உன் அடிமையம் அருள்கென இமையவர்
என்பார் அன்பாராய்
அகழ்மல மேனஅனு தினமுறை யிடஅடி
யன்பால் நன்றேயாய்
அருள்மழை யிடையொழி வதுதவிர் வகைபொழி
அஞ்சே ருங்காரே
புகழ்மிகு கவுணிய மதலேமுன் அழுகை
தவிர்ந்தார் வங்கூர்சீர்
புனேதர நினேதரும் அமுதுத வியமுலே
நங்காய் செங்கேழே
திகழ்பவர் திருவுரு ஒருபயல் அமர்மயில்
செங்கோ செங்கீரை
திருவளர் மணவையின் மருவளர் குழலுமை
செங்கோ செங்கீரை. 9

வேறு

வேலை மருட்டிய வாள்விழி அற்புத
நங்காய் சந்தாதி
மேரு வளைத்தவர் மார்பு துளைத்த
தனம்பூ சுந்தாயே
பாலை இனித்தெழு தேனை அகற்றுசொல்
கொண்டாய் வண்டாயும்
பான்மை மலர்க்குழ லாய்மலை பெற்ற
மருந்தே செந்தேனூர்
சோலை நலக்கிளி யேஅமு தோத்த
கரும்பே செம்போதே
சூடு பவர்க்கிக லாய ஒழித்தவர்
தம்பால் ஒன்றீவாய்
சேலை எடுத்தகை வேளை நிறுத்தினள்
செங்கோ செங்கீரை
சீர்மண வைப்பதி வாழும் மடப்பிடி
செங்கோ செங்கீரை. 10

## 3. தாலப் பருவம்

வாங்கும் கோடிநுண் ணுசுப்போசிய
வார்க்குங் குமவன் முலைசுமந்த
மடவ நடைமங் கையர்நறிய
மாலைக் குழல்கட் டவிழ்க்கஅது
தாங்கும் விரைமேன் றுகள்வீழ்ந்து
தவழ்ந்தம் மடவார் முலைகழித்த
சாந்தும் புழுகுங் குங்குமமும்
தணவா தழுந்து சேருகித்

தேங்குந் திருவீ தியிற்படிந்து
 சேறியும் ஈரம் புலர்த்தலின்அத்
தேரிவை மாரும் மைந்தர்களுஞ்
 சிந்தைக் கவற்சி யறுத்தியங்க
ஓங்குந் திருவத தமிழ்மணவை
 உறைவாய் தாலோ தாலேலோ
உலகம் உவக்குந் திருவேண்ணீற்
 றுமையே தாலோ தாலேலோ. 1

வண்கா லேன்ன வாயேன்ன
 வாய்க்கா லேனக்கால் வாயேனப்பேர்
மருவி மாரு வனங்கோள் நமை
 மான நல்லூர் பேருமணம்வான்
எண்கா நல்லூர்ப் பேருமணம்ஏர்
 ஏய்பே ருமண நல்லூரேன்
றிலகு பேயர்பூண் டுறுவனமேய்ந்
 தேன்றும் விளங்கும் இந்நகரைத்
தண்கா லறிஞர் பலர்குழுமித்
 தவாது சூழ்ந்து மருவுதலாற்
றுவா நாமும் எஞ்ஞான்றுந்
 தவாது சூழ்தல் தகுதியேன
ஒண்கால் பலசூழ் சிவலோகத்
 துறைவாய் தாலோ தாலேலோ
உலகம் உவக்குந் திருவேண்ணீற்
 றுமையே தாலோ தாலேலோ. 2

காரார் கலிநீர் முகந்தெழுந்த
கமஞ்சூற் கொண்டல் கருக்கலங்கக்
கலைவான் மதியத் துடல்பொழக்
கற்பத் தருவின் கழுத்தொடிய
நீரார் தடத்துத் தகட்டகட்டு
நெடிய வாளை மேற்பாய
நிகழ்கார் மேதி படிந்துழக்கி
நெல்லின் கற்றைக் கதிர்மேய்ந்து
சீரார் நறுந்தா மரைகுதட்டிச்
செங்கட் கரும்பு கறித்தருந்தித்
தேமா நிழலிற் பெருணவு
செறித்துண் டிடலே பொருளெனக்கொள்
ஓரார் போலத் துயில்மணவை
உறைவாய் தாலோ தாலேலோ
உலகம் உவக்குந் திருவெண்ணீற்
றுமையே தாலோ தாலேலோ. 3

நிலவு தமைநன் கினிதுயிர்த்த
நிலமா கியநற் றாய்மகிழ
நிரம்பு பயமுட் டுபுவளர்த்து
நிகழ்கா ராய செவிலித்தாய்
குலவு பசிதீர் தரஉணவு
கொள்ளுங் கலத்தின் உவர்விரவுங்
கொள்கை தீதென் றதுகடிவான்
குறித்த பொழில்கள் பலவுநிறை
பலவும் இனிய தேமாவும்
படர்நெட் டிலைய கதலிகளும்
பண்பி னுயிர்த்த கனிச்சாறு
பாய்ச்சி நிற்ற லாற்றிசைபோய்

உலவு புகழ்சால் வளமணவை
உறைவாய் தாலோ தாலேலோ
உலகம் உவக்குந் திருவேண்ணீற்
றுமையே தாலோ தாலேலோ. 4

கத்துந் தரங்கக் கடலேழுந்து
கழியின் வழிவந் திழிவிலழல்
காலும் ஒளியுங் கருகஒளி
காட்டுந் துகிரும் வளையீன்ற
முத்தும் பரப்ப அதற்கெதிரே
முகில்வந் துறங்கும் உயர்போழில்கள்
முனிவின் றேற்றுக் கனிவிஞேடு
முகந்து பரிவத் தனைசெயல்போற்
கோத்து மலியும் பைங்கமுகின்
குலைச்சேம் பழமும் வேண்முகையுங்
கோட்டி நிற்ப அதுகண்டு
குளிர்வா ஞதி எவ்வுலகும்
ஒத்து நவிலும் புகழ்மணவை
உறைவாய் தாலோ தாலேலோ
உலகம் உவக்குந் திருவேண்ணீற்
றுமையே தாலோ தாலேலோ. 5

*வேறு*

கருணை ததும்பி வழிந்து பரந்த
கடைக்கட் சேந்தேனே
கடையேன் மூல மலத்தை விளர்க்கக்
காணுங் குழலமுதே

மருமலி பைந்துள வத்தொடை மாமுகில்
வந்தபின் வந்தமினே
மாரு அன்ப ருளத்து முளைத்து
வளர்ந்தெழு பைங்கொடியே
பொருவரு பைங்கிளி தங்கிய செங்கைப்
பொற்புயி ரோவியமே
புயல்தவழ் சிமயத் திமயப் பிடியே
பொலிமலர் மாளிகைவாழ்
தருண மடைந்தையர் தாழுங் குயிலே
தாலோ தாலேலோ
தண்ணிய மணவைப் புண்ணிய மயிலே
தாலோ தாலேலோ. 6

உழைதரு கையுடை எந்தை பிரானுக்
குடனேழி யாதமரர்
ஓங்கு சிருட்டிமு னேரைந் தொழிலும்
ஒருங்கு முடித்திடுவாய்
குழைதரு சிந்தையின் நேக்குரு கிக்கசி
கொண்டுகை கூப்பிடுவார்
குவித லிலாத உளக்கோ யிற்கிடு
கோலம் பொலிசுடரே
மழைதரு முகிலும் விளர்ப்ப இருண்ட
மலர்க்குழ லோதிமமே
மாரு வினையேங் குடிமுழு தாண்டுற
வாழ்வித் திடுமமுதே

தழைதரு மறையெனும் மாவிற் குயிலே
தாலோ தாலேலோ
தண்ணிய மணவைப் புண்ணிய மயிலே
தாலோ தாலேலோ. 7

*வேறு*

உணர்பவ ருட்பொலி மழகதி ரொத்தொளிர்
தாயே நாயேனுய்
உழலு மெனக்குந லருள்பொழி உத்தம
மாதே போதேவாழ்
புணர்முலை அற்புத மகளிர் பழிச்சிடு
தாளாய் வேளாயே
புவன மனைத்தையும் உதர மடக்கிய
மாதா வேதாவே
யிணர்மல ரிற்குதி கொளுநற வொத்தமெய்
வாழ்வே தாழ்வேக
எனஅயன் முற்பல அமர ரிரக்குமுன்
ஈவாய் பூவாயோர்
வணர்கொள் முகிற்குழல் வதிபிறை மெய்க்கவு
மாரீ தாலேலோ
மணவை நகர்த்தலை மருவு மகத்துவ
மானே தாலேலோ. 8

*வேறு*

வந்திப் பவர்பெரு வாழ்வே தாழ்வே யாழ்வேனும்
வஞ்சக் கொடுவினை நாயேன் ஓயா தேஆயா
முந்தித் திருவருள் சாரா ஓரா வேராரா
மொய்ம்புற் றிடவருள் மானே தேனே கோனேயாம்

நந்திப் பொலிமலை மாதே சூதே ஓதேர்சால்
நன்றற் புதமுலை யாளே வாளே நீளேவே
சிந்தித் திடுவிழி யோராய் தாலோ தாலேலோ
திண்பொற் புரிசைநல் லூராய் தாலோ தாலேலோ.

கரியக ணுயவை யேவாய் தாலோ தாலேலோ
கருதுநர் பாலொளி யாவாய் தாலோ தாலேலோ
அரியபெம் மானிட மோவாய் தாலோ தாலேலோ
அருள்வர மேபொழி நாவாய் தாலோ தாலேலோ
உரிய ரலாருயிர் காவாய் தாலோ தாலேலோ
ஒளிர்முலை யாமத மாவாய் தாலோ தாலேலோ
பிரிய முருருள மேவாய் தாலோ தாலேலோ
பெருமண மேவிய பாவாய் தாலோ தாலேலோ. 10

## *4. சப்பாணிப் பருவம்*

பார்வளர் மதிக்குழ வேனக்கமு மலத்துற்
பவித்தேன் பவந்துடைத்த
பரசமய சிங்கமேன் றுரைசெயும் பாலருப்
பவளவா யார்மணத்துக்
கார்வளரோர் ஆணவமும் இருவினையும் மும்மலக்
கட்டும்உட லாதிநான்குங்
கருதுசாக் கிரமாதி ஐந்தும்மந் திரமாதி
கரையாறும் நீந்திஎழுமா
ருர்வமுற மூழ்கிப் புறத்தடையு மாசென
அகத்தடையும் மாசும்மண்ணி
ஆன்றபஞ் சாக்கரப் புனலகன் கரைமேவும்
ஆருயிர்க் கருள்சுரந்து

சார்வரிய வேண்ணீறு நல்குந் திருக்கைகோடு
சப்பாணி கோட்டியருளே
தருமணந் தவழவமை பேருமணங் கமழுமுமை
சப்பாணி கோட்டியருளே. 1

வேயேனப் போலிபசுந் தோளுடைய மலர்மாதர்
மேன்மையங் காந்தள்தாங்கும்
மீளிர்கமல மலர்பகலும் இரவுமேழும் இருசுடர்
வீராவுற விழுங்குமரவ
மாயேனப் போலிகருணை யம்மான் திருக்கையோ
டளாவுங் கேளிற்றுமுலம்
அன்புபுரி வழியடியர் பவவாரி முழுமையும்
அலைத்துச் சுவற்றுவடவை
சேயனப் போலிவரைக் கிழவன்விழி வளருந்
திருந்தலர் படுத்தஅமளி
தேய்வஅறம் முப்பத் திரண்டையும் வளர்க்கும்நற்
சேம்மையான் மிக்கசேவிலித்
தாயேனப் போலிநினகை மலர்முகிழ்த் தம்மையோரு
சப்பாணி கோட்டியருளே
தருமணந் தவழவமை பேருமணங் கமழுமுமை
சப்பாணி கோட்டியருளே. 2

குழைதரச் சுவைமதுப் போழிதண்டு வாங்கிக்
குலாவுஞ் சுருப்புநாணுங்
கூட்டிஅதின் மலரோன்று நாட்டிவலி காட்டிஎதிர்
கோற்றவேள் போற்றகாமர்

விழைதரப் போலியுருவு முற்றும்அழல் பற்றுமோரு
வேவ்விழிக் குணவுசெய்த
மெய்யர்சிவ லோகத் தியாகர்பனி மால்வரை
விருப்புறு மணப்பந்தரின்
இழைதரத் தக்கஇடை ஒசியவன முலைசுமந்
திணர்மலர்க் கோம்பினிற்கும்
ஏங்தேழினி னருகுற்று மறைமுழங் கப்பல
இயங்கலிப் பப்பல்புவனங்
தழைதரப் பற்றுகைத் தாமரை முகிழ்த்தம்மை
சப்பாணி கோட்டியருளே
தருமணங் தவழவமை பேருமணங் கமழுமுமை
சப்பாணி கோட்டியருளே 3

சேய்யகம லம்போருவும் என்பது திறம்பச்
சேயற்கைச் சிவப்பேழுந்து
சேறிதரக் கன்றுமேன் றேண்ணுது பதிமுனுஞ்
சேர்ந்தறி தராதஇவைகள்
வையமிசை இவர்முனஞ் சேர்வதோ என்றுள
மதித்திடா தண்டரண்டம்
மாண்டபகி ரண்டமுற் றீன்றளிக் குங்கருணை
வாஞ்சைநற் ருயாதலான்
மையவிரு மேங்கள்கண் மலரோடு வதனமும்
மலருமா றுளமிரங்கி
வளமோழிப் பைங்கிள்ளை தாங்கியதன் இறகுதை
வந்துநங் துவகையுறுநின்

தையலமர் கைம்மலர் முகிழ்த்தம்மை யம்மையொரு
சப்பாணி கொட்டியருளே
தருமணந் தவழவமை பெருமணங் கமழுமுமை
சப்பாணி கொட்டியருளே. 4

உரவுமறை பாடுசிவ லோகத் தியாகரென்
றுரைசெய்நின் கொழுநர்மகிழ
உள்ளங் கசிந்துநெக் குருகியுரு கிக்குழைந்
தோங்குதுதி பலபாடுவோம்
கரவுதவிர் மூத்தநின் மகற்கினிய மோதகங்
கைதோடப் பலபடைப்போம்
கருதிள மகற்குநறு மான்மதஞ் சாந்தங்
கருப்பூர மப்பிவிடுவோம்
பரவுமந் தாகினி நினக்கடிமை செய்யுமொரு
பாவையென் றேநாட்டுவோம்
பரிந்துனைத் துதிபுரிதல் சொல்லவேண் டுங்கொலெம்
பாலருள் சுரந்துமிக்கா
தரவுபெரு கக்கர முகிழ்த்தம்மை யம்மையொரு
சப்பாணி கொட்டியருளே
தருமணந் தவழவமை பெருமணங் கமழுமுமை
சப்பாணி கொட்டியருளே. 5

வேறு

வெட்டுப் புயல்தவழ் சிமையத் திமைய
விலங்க லிடைத்தோன்றி
விண்ணவர் மண்ணவர் எண்ணுமொர் வெள்ளி
விலங்க லிடைத்தனியே

பாட்டுப் பிரமர முளருங் கொன்றைப்
பைந்தார் வேய்ந்துலவும்
பண்பார் பிரணவ குஞ்சர மேவிப்
பாரொடு விண்வெருவும்
மோட்டுத் திறல்கொ டுலாவிரு கோட்டொரு
மூரிச் சினவேழ
முனைமுதன் மாய்ந்தொரு வரைபோற் சாய்தர
முனிவிற் பொருமொருவெண்
கோட்டுக் களிறு பயந்த மடப்பிடி
கொட்டுக சப்பாணி
குணவைப் பேனவமை மணவைப் பதியுமை
கொட்டுக சப்பாணி. 6

தமரத் திரைபடு தொடுகட லுலகிற்
றண்ணிய பிரமபுரந்
தழைதரு வேணு புரப்பெயர் பூணத்
தாவில் வரங்கொண்டே
அமரர்க் கதிபதி முதலியர் திருவனை
யார்புக ழொடுகூட்டுண்
டண்ட மடங்க நடாவு கொடுங்கோ
லாளியு மவனிளைய
பமரத் தொடைநெடு முடிவலி யினரும்
பன்மைந் தருமிடையும்
படையும் முடையும் படிதடி கடிவடி
பயிலயில் வலனேந்து

குமரக் கடவுளை ஈன்ற கருங்குயில்
கொட்டுக சப்பாணி
குணவைப் பேணவமை மணவைப் பதியுமை
கொட்டுக சப்பாணி. 7

பிறைமதி நிறைபுன லுரைதரு சடிலப்
பெருமா னொருமான்வாய்ப்
பெருகொலி யொருசெவி யருகுற நிறுவு
பிரானொரு பாலமர்வாய்
கறைதப மறைமுடி போதுமோர் கிள்ளை
கலந்தமர் கைக்கிளியே
கடையேன் குடிமுழு தாண்டு விரும்பிக்
காக்கும் பைங்கொடியே
மறைமுழு வதுமே கலைசெய் தரையணி
மாதே மாதரசே
மலையி னுதித்த மருந்தே வெள்ளிய
வாணகை யோதிமமே
குறையற அடியவர் பாற்பொலி சுடரே
கொட்டுக சப்பாணி
குணவைப் பேணவமை மணவைப் பதியுமை
கொட்டுக சப்பாணி. 8

*வேறு*

சிறுமதி நதிபொதி மிடைசடை யுடைய
ரிடத்து மடப்பாவாய்
செறிதவர் மனஇருள் முழுதற அவனொளிர்
பத்ம பதத்தோயே

மறுவறு கதிரோடு மதியுற வுறுமிரு
ளோத்த குழற்கோதாய்
மறுகுறு சிறுகிடை ஒசிதர வளரிள
முத்த முலைத்தாயே
கறுவோடு மேழுகோடு விடமமிர் துறவிடு
கட்கடை நற்றேகாய்
கதிர்விழி யெனஒரு தமியனேள் ளோளிமுழு
கத்தயை வைப்போயே
குறுமுனி தொழுதெழு பனிமலை வருமயில்
கொட்டுக சப்பாணி
குளிர்மலி பொழிலெழில் மணவையி லமர்குயில்
கொட்டுக சப்பாணி. 9

படவர வச்சுமை முழுது முணப்பசி
யுற்ற வனத்தாரர்
பதும மலர்த்தலை யமர்மறை வித்தகர்
அட்ட திசைப்பாலர்
கடவுளர் மற்றையர் முனிவரர் பத்தி
செயப்படு மெய்த்தேவீ
கமல மலர்த்தலை மகளிர் முதற்பல
ஏற்புறு கற்போயே
மடமை யறுத்தென திதய மலர்க்க
ணிருக்கும் அனப்பேடே
மதிய முடித்தவர் நிதிய மெனத்த
முளத்துற வைப்போயே
குடவளை மொய்த்தசெய் மணவை மடப்பிடி
கொட்டுக சப்பாணி
குலவிம யத்தனி வரைவரு முத்தமி
கொட்டுக சப்பாணி. 10

## 5. முத்தப் பருவம்

கொழுதும் வரிவண் டுழுதுழக்கிக்
கொழுந்தேன் நிரம்ப வாய்மடுத்துக்
குமட்டிக் கவிழ்ந்தாங் கெதிரெடுக்குங்
குளிர்மென் மலர்ப்பூங் குழற்கொம்பே
தொழுதும் அழுதும் புகழ்பாடித்
துதித்தும் உருகி யுருகிநிகழ்
தொண்ட ருளக்கோ யிலுக்கமைத்த
தூண்டா விளக்கே சுயஞ்சோதி
எழுதும் உயிரோ வியக்கொழுந்தே
எழுதா உருவத் திளங்கொடியே
எழுபே ருலகும் நினைந்துதொழு
தெழுகோ மளமே இலவாதி
முழுது மிணையில் நின்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முதுசீர் மணவைப் பெருமாட்டி
முத்தந் தருக முத்தமே. 1

நனியா தரஞ்செய் துள்ளுருகி
நைந்து குழைந்து நாத்தழும்ப
நாளும் வழுத்தும் பேரடியார்
நலஞ்சால் உள்ளத் தூற்றரும்பி
இனியா நிற்குஞ் சுவையமிழ்தே
ஏழைத் தொழும்பு பூண்டொழுகும்
எங்கள் குடிக்கும் ஒருமுதலே
எல்லா உயிரும் இனிதீன்று

கனியா நின்ற பேரருளிற்
கசிந்து நோக்கி மகிழ்விக்குங்
கரும்பே புவிமுன் ஆருறுங்
கடந்த முதலி லாமுதல்வன்
முனியா தவாவுஞ் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முதுசீர் மணவைப் பெருமாட்டி
முத்தந் தருக முத்தமே. 2

விளைக்கும் மதுரச் செங்கரும்பு
விரும்பு சுரும்பு நாண்பூட்டி
விரைக்கோல் தொடுத்த வேளுடலம்
விழித்தீக் குணவாக் கியதுமறந்
திளைக்குங் கோடிநுண் மருங்குல்கவன்
றேங்க வீங்கும் இளமுலையும்
இலகு பசிய வேய்த்தோளும்
எழில்கோப் புளிக்குந் திருமுகமுந்
திளைக்குங் காதல் கொடுநோக்குஞ்
செய்ய சடைவெண் பிறைமுடித்த
தேவ தேவன் முகக்கமலஞ்
சேவ்வே மலர வெண்ணிலவு
முளைக்கும் பவளச் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முதுசீர் மணவைப் பெருமாட்டி
முத்தந் தருக முத்தமே. 3

கத்தங் கமழுங் குழற்கோதை
நல்லார் அறுவர் திருமுலைப்பால்
நன்கு தேவிட்ட உண்டுபசு
நறும்புற் புனற்ருேட் டிலினமர்போ
தத்தங் கமழும் படியேடுத்தாங்
கணைத்து மார்பின் உச்சிமோங்
தார்வம் பெருக நோக்குதோறும்
அருளாற் பெரிய யோகியர்தஞ்
சித்தங் கமழுங் கிண்கிணிப்போற்
சிலம்பு புலம்பு சேயிதழ்த்தாள்
தேய்வச் சைவச் சிறுகுழவி
திருவாய் ஆறும் உவந்தளிக்கும்
முத்தங் கமழும் நின்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முதுசீர் மணவைப் பெருமாட்டி
முத்தந் தருக முத்தமே. 4

அழியும் புவனச் சிறுவாழ்வும்
அமரர் புவனப் பெருவாழ்வும்
அம்ம நாளும் அருவருக்கும்
ஆர்வம் பூண்ட மலபாகர்
விழியும் மனமுங் குளிர்தூங்க
விதிகா ணரிய திருவுருவம்
மேவி ஆவி முதல்மூன்றும்
விருப்பின் வாங்கி எவ்வினையும்

ஒழியும் படிசெய் நோக்காதி
ஒன்றப் புரிந்து சிவானந்தம்
ஊறிப் பெருகித் ததும்பியெழ
ஒன்று மொழிவார் உளங்குளிர
மொழியும் பவளச் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முதுசீர் மணவைப் பெருமாட்டி
முத்தந் தருக முத்தமே. 5

வேறு

மதிமுத்தம் வீரன்வயி ரக்கழற் கால்தேய்க்க
மண்ணிடத் தேய்ந்த துயர்வேய்
வருமுத்த மதினெழுந் தழலால் வெதுப்புண்டு
மாமைகரு கியதுசெஞ்சொற்
பொதிமுத்தம் வன்பகடு காலுழக் கப்பிளவு
பூண்டதால் இப்பிவளைமீன்
பொலிமுத்தம் வெய்யபுல வொழியாது நாறுமொண்
பூவையர் களத்துமேவுங்
துதிமுத்தம் அவர்மகிழ்நர் கைப்பட் டதுக்குண்டு
தோன்றுது மறையும்இக்குச்
சுடர்முத்தம் ஆலையின் நெரிந்ததிவை வேண்டேம்
தொடுத்தபற் பலவுயிர்க்கும்
பதிமுத்த மேற்றுமகிழ் நிதிமுத்த மன்னசெம்
பவளமுத் தந்தருகவே
பல்லூர் விரும்புமெயில் நல்லூ ரரும்புமயில்
பவளமுத் தந்தருகவே. 6

அடரிருட் போலிவழிய ஆயிரங் கதிர்விரித்
தாதித்தன் உதயம் எழும்ஓர்
அருவரைச் சேந்தூர அருவியிற் பன்னூளும்
ஆழ்ந்தோளி பரப்புமணியும்
சுடர்விரித் தேழுவசிச் சுதரிசன மும்தனித்
தோல்வளையும் ஏந்துமோருவன்
துழாய்ப் படலை மறுமார்பி னுக்கழகு சேயும்விலைத்
தோகையிலா அரியமணியும்
இடர்கேடத் தகுவரோடு சதகோடி கோண்டுபோரும்
ஏந்தலூர் மணியும்மற்றும்
இயம்பும்ஐந் தலைநாக மணியும்யாம் வேண்டலம்
எமக்கம்மை சேந்துகிரேனப்
படர்சடை தரித்தபோல் லாமணி அவாவுநின்
பவளமுத் தந்தருகவே
பல்லூர் விரும்புமேயில் நல்லூ ரரும்புமயில்
பவளமுத் தந்தருகவே. 7

காவுதிர் பேரருள் விழிக்குடையும் மீனுங்
கலந்துபர ஞானம்ஊறுங்
கதிர்முலைக் குடையுங் களிற்றிகல் மருப்புங்
களத்தினுக் குடையும்வளையும்
விரவுபா கேனுமோழிக் குடையுங் கரும்புமெழில்
மேயதோட் குடையும்வேயும்
மிளிர்கவா னுக்குடையும் வாழையு முகத்திற்கு
மேன்மேலும் உடையும்மதியும்

புரவுசால் கைக்குடையும் நளினமும் நறுங்குழற்
போலிவினுக் குடையும்முகிலும்
போற்புறத் தருமுத்தம் வேண்டலங் கண்டம்
போலிங்தோளிர நீலம்வைத்த
பரவுமா ணிக்கமோரு பால்வைத்த மரகதம்
பவளமுத் தந்தருகவே.
பல்லூர் விரும்புமேயில் நல்லூ ரரும்புமயில்
பவளமுத் தந்தருகவே. 8

வேறு

மறையின் முடியும் எனது ளகமும்
மனமு ளுருக நித்தமும்
மதுர மோழியின் இனிய துதிசேய்
மறுவில் அடியர் சித்தமும்
அறையு மறைவில் கருணை பேருகி
அலையதேரியும் அக்கமும்
அளவில் பிறவி உததி சுவற
அலர்சேய் சரண பத்மமும்
நிறையும் அழகு போழியும் முகமும்
அபபய வரத அத்தமும்
நிகரில் பிறவும் இலக அமரும்
நிலவும்அமல உத்தமி
கறையில் சிமைய இமையம் உதவு
புதல்வி தருக முத்தமே
கரையில் வளமை அளவு மணவை
முதல்வி தருக முத்தமே. 9

வஞ்ச மருவு நேஞ்ச மருவ
அஞ்சி விலகு சத்தியே
வம்பு தழுவும் என்பு லுரையும்
நம்பி அருள்சேய் பித்தியே
கஞ்சம் மருவு மஞ்சன் விறல்மு
குந்தன் வேளிய அத்தியூர்
கந்த மலர்அ லங்க லணிபு
யன்பன் முறைது தீத்துநீ
தஞ்ச மேனஉ வந்த னையர்முன்
நின்றஒளிரோ ருத்தியே
சங்கு குழையர் திங்கள் முடியர்
பங்கி னமர்தி றத்தியே
அஞ்சம் உலவு நன்சேய் மணவை
அம்பை தருக முத்தமே.
அன்பர் மனம் உவந்த அருள்அ
ணங்கு தருக முத்தமே. 10

## 6. வாரானைப் பருவம்

விற்கோண்ட வாணுதற் பட்டமுஞ் சுட்டியும்
விளங்கோளி துளும்புசூட்டும்
விரைநறுங் குழலிற் கவிழ்த்திடு தகட்டணி
விராயசேம் மணியின்ஒளியுஞ்
சோற்கோண்ட வள்ளைச் சேவிக்கண்மர் தோடும்இரு
தோள்வருடி யாடுநீடு
சோதிக் குதம்பையும் இளஞாயிறு றுதயஞ்
சுரப்பமார் பத்துவயிரக்

கற்கோண்ட பணியும்முத் தாரமும் வேண்ணிலாக்
கற்றைகால் சந்த்ரோதயங்
காட்டஇரு கைவளை கலிப்பச் சிலம்புகள்
கலின்கலி னேனப்புலம்ப
எற்கோண்ட தளிரடி பேயர்த்துமண வைப்பதி
எழிற்பரா பரைவருகவே
ஏகர் சிவ லோகத் தியாகரோரு பாகத்
திருக்குமுமை யாள்வருகவே. 1

ஆருறு தத்துவமும் வேதாந்த முங்கடந்
தவிர்வனவிண் முழுதுமாளி
ஆதிப்பல் வானவரும் ஆதரிப் பனஉந்தி
அன்னம்இன் னமுமுணர்தரா
நாருறு தங்குமுடி ஒண்மதிப் பிறைஅஞ்ச
நகுவன களங்க மோழிமேய்ஞ்
ஞானயோ கியருளங் குடிகோள்வன நைந்துருகி
நாத்தழும்பத் துதிப்பார்
கூருறு காலுழக் காமலர் இடுந்தோறுங்
கோண்டுவப் பனஎன்றுபல்
கூர்த்தமதி யாளர்புகழ் மேல்லடி பேயர்த்தழகு
குலவஇரு பத்தாறிநே
டேருறு புண்ணியமும் அணவுமண வைப்பதி
எழிற்பரா பரைவருகவே
ஏகர்சிவ லோகத் தியாகரோரு பாகத்
திருக்குமுமை யாள்வருகவே. 2

திங்களர வங்கள்மலி கொன்றைமலர் துன்றுசடை
தேடிமுன் கண்டறிதராச்
செஞ்சூட்டு வெள்ளோதி மங்தொடர ஆயிரங்
தெய்வத் திறத்துநிகழ்வே
தங்கள்பெரு கோலமிட் டுத்தொடர நறியசெங்
தாமரை உயிர்த்தமாதுங்
தாதுசேறி வெண்சத தளக்கமல மாளிகைத்
தலைஅமரும் மாதும்மிகுபோ
கங்கள்மலி வானகத் தயிராணி யும்பல
கருங்குழல் அம்பைமாருங்
கைகுவித் துத்தொடர மெய்ஞ்ஞான யோகரிரு
கண்களுங் தொடரஇடர்தீர்ங்
தெங்கள்மன முங்தொடர மெல்லடி பெயர்த்தினி
தொழிற்பரா பரைவருகவே
ஏகர்சிவ லோகத் தியாகரொரு பாகத்
திருக்குமுமை யாள்வருகவே. 3

பன்மலர் முகந்திரு கரங்கொண்டு தூய்நெடும்
பனிவீசும் பமருமடவார்
பணிதோறும் அவர்குழல் அளாயதர ளப்பிறை
பதிந்திடத் தோன்றுசுவடுங்
கன்மலர் மனத்தைவண் கருணைபுரி யாய்கொலென்
காதற்கி தழகுகொலெனக்
கற்பனைக் கடந்தவர் தொழுந்தொறும் அவர்முடிக்
கட்பிறையை ஏற்றலாலே

முன்மலர் தருஞ்சுவடு மேல்கீ ழுறப்பேற்று
மோகநீத் தவருளத்தான்
மூடிடப் பட்டுமய லாழ்ந்தா ருளம்பதிய
முழுதும்அச் சுற்றுவிலகும்
என்மலரு நின்மல ரடித்துணே பேயர்த்துந
லேழிற்பரா பரைவருகவே
ஏகர்சிவ லோகத் தியாகரோரு பாகத்
திருக்குமுமை யாள்வருகவே. 4

ஆலக் கருங்களத் திறைவருடன் நீங்கா
தமர்ந்துபரை ஆதிஇச்சை
அறிவு தோழி லாகிஉயிர் ஐம்பாச மற்றுய்ய
ஐந்தோழில் நடாத்துமயிலே
சாலக் கருங்கோண்ட லோமர கதங்கோலோ
தக்கஇந் திரநீலமோ
தழைதரும் பூவையோ எனுமேனி வாய்ந்தமா
தவனுடைத் தங்கையயேகார்
நீலக் கருங்கண் திருக்கோதை மாதோடு
நிலாவுகலே மாதுநாளும்
நிகழத் துதிக்கும் பேருஞ்சேல்வி யேகல்வி
நேயமிக் கார்வாழ்க்கையே
ஏலக் கருங்குழற் சேய்யவாய் வேண்ணகை
எழிற்பரா பரைவருகவே
ஏகர்சிவ லோகத் தியாகரோரு பாகத்
திருக்குமுமை யாள்வருகவே. 5

*வேறு*

மின்னிப் பொலியுங் கருங்கொண்மூ
விளர்க்குங் குழலார் மைந்தரொடும்
விளையாட் டயர இனிதமைத்த
வியன்மா ளிகைமேற் செய்குன்றில்
துன்னிப் பொலியும் படிபதித்த
தொகுசெம் பதும ராகமணிச்
சுடர்மீ தெழுந்து வானளவுந்
தோன்ற நிற்றல் தமிழ்வேதம்
பன்னிப் பொலியுஞ் சம்பந்தர்
பரவு மணத்தில் எம்பெருமான்
படர்பே ரொளியாய் நின்றதிறம்
பாரார் அறியத் தெரிவிக்க
மன்னிப் பொலியும் வளநல்லூர்
வாழ்வே வருக வருகவே
மாறாக் கருணைச் சூல்கொண்ட
மயிலே வருக வருகவே. 6

மோனம் ஓங்குஞ் சிவயோக
முத்தர் உள்ளம் உமிழாத
மும்மைத் தமிழ்தேர் விரகர்மணம்
முடித்துப் பெறுபேற் றின்புகழ்போற்
கானம் ஓங்கு மறைமுழங்கக்
கங்குல் அழிந்து கழிந்தோடக்
கதிர்வெண் மதியோ டுடுவொளிப்பக்
கமல முகைகள் முறுக்குடையத்

தானம் ஓங்குங் கூகைதுயர்ச்
சலதிமூழ்கக் கோடிஉவப்பத்
தண்டா துதயம் எழுங்கதிரோன்
தடந்தேர்ச் சேலவு தனைத்தடுத்து
வானம் ஓங்கு மதில்நல்லூர்
வாழ்வே வருக வருகவே
மாருக் கருணைச் சூல்கொண்ட
மயிலே வருக வருகவே. 7

சந்து தவழும் முலையாரும்
தாமந்தவழும் புயத்தாரும்
தவாது தழுவும் மாளிகையும்
தனிமேல் நிலையும் ஆடரங்கும்
இந்து தவழுஞ் செய்குன்றும்
எழில்கோப் புளிக்கும் அரமியமும்
இன்பங் குடிகோள் வேதிகையும்
இடங்கோள் மணிமுன் றிலும்மறுகும்
நந்து தவழுந் தடம்படிந்து
நறும்பூஞ் சோலை யகத்துறங்கி
நகுபே ரந்தி மாலையிற்பன்
னலஞ்சால் போதிய வரையுதித்த
வந்து தவழுந் திருநல்லூர்
வாழ்வே வருக வருகவே
மாருக் கருணைச் சூல்கொண்ட
மயிலே வருக வருகவே. 8

மூரி எருமைக் கரும்போத்து
மோட்டுப் பியலின் நுகங்கிடத்தி
முடங்கூர் நாஞ்சில் ஏர்க்கால்அம்
முரியா நுகத்தின் நடுப்பொருத்தி
வேரி கடைவாய் வழிஇழிய
விரும்பும் உழவர் எறுழ்இடக்கை
மேழி தழுவ மற்றேருகை
வெய்ய இரும்பு முட்கோல்கொண்
டாரி தழியார் அடியும்வெளி
ஆமே யேனமண் பிளவுபட
ஆங்காங் குரப்பி உழும்ஒதை
அம்ம பரத்த லாற்பகல்வாய்
வாரி யடங்கும் வளநல்லூர்
வாழ்வே வருக வருகவே
மாருக் கருணைச் சூல்கொண்ட
மயிலே வருக வருகவே. 9

பணியே விரும்பு துணிபினர்தம்
பற்றே வருக முற்றுணர்ந்த
பரம யோக ருடன்பிரியாப்
பரையே வருக அவர்புனையும்
அணியே வருக அவர் இனிய
அமுதே வருக அவர்திருப்பே
ரருளே வருக அவருளங்கொள்
அனமே வருக அவர்முடிக்குங்

கனியே வருக மெய்ஞ்ஞானக்
கனியே வருக ஆனந்தக்
கடலே வருக எங்கள்இரு
கண்ணே வருக கண்ணினுள்வாய்
மணியே வருக திருநல்லூர்
வாழ்வே வருக வருகவே
மாருக் கருணைச் சூல்கொண்ட
மயிலே வருக வருகவே. 10

## 7. அம்புலிப் பருவம்

திகழ்தரு கடுக்கைமலர் சூடுசிவ லோகத்
தியாகர்த முடிக்கலத்துட்
சிறந்தஒன் ருய்அனையர் கண்ணுளோன் ருய்அனையர்
திருமேனி எட்டுள் ஒன்ருய்ப்
புகழ்தரு வலத்தவர் இயக்குமறை வாம்புரவி
பூண்டதேர்க் காலுள்ஒன்ருய்ப்
போலிவதன் றியும்அனையர் புண்ணியப் போடியேனப்
போங்குகதிர் எங்கும்உமிழ்வாய்
இகழ்தரு பவந்தவிர்த் தருள்அனைய ரைப்பல
இடத்தினும் போற்றல்செய்வாய்
இத்தகு சிறப்புணர்ந் துன்ஞேடு கலந்தாடல்
எண்ணினுள் எங்கள்வினைமுற்
றகழ்தரு திருப்பெரு மணத்தம ரருட்பரையோ
டம்புலீ ஆடவாவே
அலகில்புவ னங்கள்முற் றீன்றதாய் காண்இவளோ
டம்புலீ ஆடவாவே. 1

எண்ணுமதி யினர்மதிக் கடவுளென நுவலுதற்
கேற்பஒண் கலையாளனும்
இரியாத தண்மையா னனுமாயி னுய்இன்னும்
இருளில்ஒளி யோனுமானுய்
நண்ணுமோரு பாந்தளோரு புடைகோளினும் ஒரு
நானில விளக்காகுவாய் [புடையில்
நாயனுர் திருமுடிக் கங்கையிற் சங்கையற
நாடோறுமூழ்கி எழுவாய்
மண்ணுலகில் அளவில்பைங் கூழ்தழையு மாறருள்
வழங்குவாய் உனதுசெய்கை
மதித்துநன் றேன்ருட வாஎன் றழைத்தனள்
வழைத்தடஞ் சோலைமுகின்மேல்
அண்ணுவள மேவுந் திருப்பெரு மணத்துமையோ
டம்புலி ஆடவாவே
அலகில்புவ னங்கள்முற் றீன்றதாய் காண்இவளோ
டம்புலீ ஆடவாவே. 2

சுரும்புசேறி கழுநீர் மலர்த்துவாய் நறவம்மிகு
தோகுகமல மலர்குவிப்பாய்
சுகமிக மணந்தவர்க் கின்பமா வாய்துன்ப
மாவாய் தணந்தவர்க்குப்
பெரும்புவி விரும்பநிறை வாய்அது வெறுப்பநோய்
பெற்றுர்மெய் போன்றுகுறைவாய்
பேராழி மிகமுழங் கத்தோன் றுவாய்அஃது
பேசாதடங்க மறைவாய்

இரும்புவனம் ஏத்துநடு நிலேயோடோரு தன்மையே
எஞ்ஞான்றும் எய்திநிலவும்
எங்கள்கருணும்பிகைநின் இயல்முழுதும் எய்த்துமுன்
எய்யாரின் வருகஎன்ருள்
அரும்புநலம் ஆர்பெரு மணத்தமர் அருட்பரையோ
டம்புலி ஆடவாவே
அலகில்புவ னங்கள்முற் றீன்றதாய் காண்இவளோ
டம்புலி ஆடவாவே. 3

சங்கம்நக ஊரும்வெண் டிரையேறி தடங்கடல்
தவாதே எழுந்துபோங்கத்
தண்கலேகள் முழுமையும் நிரம்பிமுழு மதியேனத்
தழைதர எழுந்தபோது
போங்கஎகம் ஆரும்நம் திருமுக மேனக்கருணே
பூத்தினி தெழுந்ததேன்றும்
போலிஉருப் பாதியாய் எழுபோது திருநுதற்
போலிவுற் றெழுந்ததேன்றும்
மங்கஎக உருவின்றி மறைதரும் போதுநம்
மருங்குலே ஒத்ததேன்றும்
மகிழுமா தேவிஇவள் வம்மேனக் கூவின்நீ
வாரா திருப்பதழகோ
அங்கஎக மணிமாளி கைப்பெரு மணத்துமையோ
டம்புலி ஆடவாவே
அலகில்புவ னங்கள்முற் றீன்றதாய் காண்இவளோ
டம்புலி ஆடவாவே. 4

பேராழி சூழ்திருக் காழியிற் பாலுண்ட
பிள்ளையார் திருமணத்துப்
பெருகவந் தடையும்மா தவரோடுங் கூடிப்
பிறங்கவந் தாயல்லைஅன்
றோராழி ஏழ்புரவி வையத் திவர்ந்திருள்
ஒருங்கற முருக்கும்ஒருவன்
உன்னைஒத் தவன்ஒரு களங்கமும் இலான்அஃ
துணர்ந்திலான் போற்றிரிதலேன்
பாராழி வட்டம்வி ளுவப்பஇன் றேனும்
பரிந்திங்கு வந்தாயேனிற்
பாடுசால் நின்பெருமை பாடஎளி தாகுங்கோல்
பாசாங் குசத்திறேடும்
ஆராழி சங்கங்கோள் கைப்பெரு மணத்துமையோ
டம்புலீ ஆடவாவே
அலகில்புவ னங்கள்முற் றீன்றதாய் காண்இவளோ
டம்புலீ ஆடவாவே. 5

உலகுபுகழ் பஞ்சாக் கரப்பெருந் தீர்த்தம்என்
றோன்றுண்டு மூழ்கினேருக்
கோழியாத பிணிமுழு தோழிப்ப ததன்மான்மியம்
உரைக்கரிது முகமன்அன்றால்
இலகுமிஃ தன்றியுங் கூபவடி வாய்க்கங்கை
என்பதோன் றுண்டதன்சீர்
எம்மனோர் பேசுதற் குரியதரி யதுபெரிய
தித்தலப் பெருமைகண்டாய்

விலகுகோடு வஞ்சமுடை நேஞ்சரல் லார்என்றும்
மேவரிய இத்தலத்து
விளையாடல் கருதிவா என்றிறைவி யேஉனை
விளிக்கநீ செய்ததவமேன்
அலகுதவிர் பேருவளம் போலிபேரு மணத்துமையோ
டம்புலி ஆடவாவே
அலகில்புவ னங்கள்முற் றீன்றதாய் காணிவளோ
டம்புலி ஆடவாவே. 6

சிறந்தமா ணுக்கன்நீ யேயென்று பலருஞ்
சிரிக்கஆ சாரியன்றன்
தேவிஇள வனமுலை ஞெமுங்கஅகன் மார்பிற்
றிளைத்துநீங் காதபழியோ
டுறந்தபே ரரியவேங் கவலையுந் தவலிலா
ஒருசாப மும்பூண்டுளாய்
ஒழியாது தக்கனிடு சாபத் தோடக்குண்
டுழன்றுவான் அலைதல்தவிராய்
இறந்தமா மலமுடைய ரேயடையும் இத்தலத்
தேய்திஇக் கருணும்பிகை
இணையில்அருள் நோக்கமும் பேறின்நினக் கேத்துய
எய்தும்நினை யாவர்நிகர்வர் [ரம்
அறந்தவா தோங்குந் திருப்பேரு மணத்துமையோ
டம்புலி ஆடவாவே
அலகில்புவ னங்கள்முற் றீன்றதாய் காணிவளோ
டம்புலி ஆடவாவே. 7

வையமுழு துய்யஒரு வாவியங் கரைநின்று
வாய்மலர்ந் தழுதபிள்ளை
மதுரமிகு சேவ்வாய்க் கருங்குழற் காதலியை
மாமணஞ் செய்தஞான்று
செய்யமலர் மீதனந் துஞ்சுபஞ் சாக்கரத்
தீர்த்தக் கரைக்கண்நின்று
சேர்ந்தார் களங்கமுற் றேழியவேண் ணீறுதன்
சேங்கரத் தால்அளித்தாள்
உய்யஇவள் வாவேன் றுரைத்தபடி யேவிரைந்
தோருவன்நீ வந்துசேரின்
உன்களங் கந்தவிர வேண்ணீறு நல்காள்கோ
லோஇதனை உணராததேன்
ஐயமன மோவித் திருப்பேரு மணத்துமையோ
டம்புலி யாடவாவே
அலகில்புவ னங்கள்முற் றீன்றதாய் காண்இவளோ
டம்புலி ஆடவாவே. 8

குறைவடிவி னேடுசிவ லோகத் தியாகர்தங்
கோடீர மாமுடிக்கண்
குலவுகங் கையின்மூழ்கி அவ்வடிவம் ஏருது
குறையா திருத்தல்பேற்றுய்
நிறைவடிவி னேடிங் கடைந்துகங் காகூப
நிறைபுனலின் மூழ்கினிணைய
நிகழ்வடிவம் ஒருதன்மை யாய்மருவ உருவவள
நிமலையருள் பேறுவதுண்மை

போறைவடிவம் வாய்ந்துவினை காய்ந்துமலம் மாய்ந்
புகழ்த்தரும நேறியில்நிற்போர் [தோளிர்
போருவரு மனப்பெருங் கோயிலக மேவிளம்
புந்திக்கும் அந்திக்குமோர்
அறைவடிவ மேவிய திருப்பெரு மணத்துமையோ
டம்புலி ஆடவாவே
அலகில்புவ னங்கள்முற் றீன்றதாய் காண்இவளோ
டம்புலி ஆடவாவே. 9

வாவேன்ற போதுவா ராதுபா ணித்ததேம்
மதிகதி உனக்குவேறேன்
மற்றிவட வர்க்குமுடி முதலடி வரைக்குமுள
வாளராத் தோகைகணக்கில்
சோவேன்ற நகைஉண்டு தக்கன்வேள் விக்களந்
தோய்ந்ததா ளுண்டுநின்னோர்
சுடர்நகை தகர்த்தசேங் கரம்உண்டு மாரற்
ருேலைத்தவிழி உண்டுகண்டாய்
காவேன்ற கைத்தலத் திவள்முனிவு சேயின்நினைக்
காப்பவரும் இலர்இவையெலாங்
கருதிவந் தருள்பேறுதி கடலுலக முழுவதும
கட்டிற் கலக்குமாவாய்
ஆவேன்ற வன்புகழ் திருப்பெரு மணத்துமையோ
டம்புலி ஆடவாவே
அலகில்புவ னங்கள்முற் றீன்றதாய் காண்இவளோ
டம்புலி ஆடவாவே. 10

## 8. அம்மானைப் பருவம்

சொல்லூர் வயத்தசிவ லோகத் தியாகர்தந்
தோட்டுணை குழைக்கநாளுந்
தோலா தெழுந்தநின் துணைமுலைக் குவடுநேர்
தோற்றியெழு தோற்றம்நோக்கி
வில்லூர் நெடுஞ்சிகர மேருவென் றுரைசெய்வட
வேதண்ட முற்றகோற்ற
வீறுமுற் றுந்தபப் பொடிசெய்து கடிசெய்து
மேவுப லுருண்டையாக்கி
எல்லூர் மணிக்கங் கணக்கரத் தேந்திமேல்
எறிவது கடுப்பஅறமுற்
றேறும்அங் கைத்தலத் துறுசிவப் பேறுவதை
எண்ணுது விண்ணுடளாம்
அல்லூர் பொழிற்பெரு மணத்தமர் பராபரைபொன்
அம்மானை ஆடியருளே
அருளின்எம் குடிமுழுதும் அடிமைகொண்
[டருளும்உமை
அம்மானை ஆடியருளே. 1

மறமணக் குங்கனல் மழுப்படைத் தம்பிரான்
மலர்பொரு திருக்கைஉலகம்
வாழ்தரக் கொத்தும்அவ் வுலகமஞ் சாதுய்ய
வரதா பயங்கொடுத்தும்
நிறமணக் குந்தருமம் முப்பத்திரண்டும்நனி
நெடுநாளும் அமரவைத்தும்
நிலவுஞ் சிருக்குமணி வடநேமி வளைசூல
நிலவுவேல் தாங்கிமுவர்

புறமணக் குந்தோழிற் கேதுநீ யேன்பது
புலப்படுத் தியுமோளிரும்நின்
பூங்கரப் புகழ்திரண் டோன்றன்பி ஞேன்றுமேற்
போயடைய எழுவதோப்ப
அறமணக் குந்திருப் பெருமணத் தம்மைமுத்
தம்மானே ஆடியருளே
அருளின் எம்குடிமுழுதும் அடிமைகோண்
அம்மானே ஆடியருளே. [டருளுமுமை 2

இறைதிரு முகத்தகத் துந்திரு நுதற்கணும்
இலங்குமுச் சுடருநோக்கி
இருளப் போலிந்தநம் இருங்குழற் கேதிராவ
திவ்விருள்கோ லேனமுனிந்து
கறைமருவு பூதஇருள் முழுதுங் கலங்கக்
கலக்கித் துவைத்தவைத்துக்
கச்சமி லுருண்டையாச் சேய்துநீ வாய்ப்பெயுங்
கவளமிவை கோடியேன்று
நிறையவேளி யாயகா னுலவுகர மதமுமிழ்
நேடுங்கதிர்க் குஞ்சரத்தின்
நேர்சேல்ல வீசுதல் கடுப்பஎதிர் காண்குநர்
நிலாவுபோன் னுலகமேன்றே
அறைதரு திருப்பெரு மணத்தம்மை மாநில
அம்மானே ஆடிருளே
அருளின்எம் குடிமுழுதும் அடிமைகோண்
அம்மானே ஆடியருளே. [டருளும்உமை 3

பன்னரிய திருமறைச் சிரமீது மருவும்
பரம்பொருள் தனைப்பகர்ந்து
பங்கயச் செங்கையமர் பைஞ்சிறைக் கிள்ளைமீப்
பலகாற் பறந்தெழுந்து
நன்னய மிகுந்தத் திருக்கரத் துறைவதென
நாட்டெத் தெழுந்தபார்வை
நக்கபெ ரன்பர்பாற் செல்வது கடுப்பநனி
நாடிமேற் சென்றுலாவ
வன்னமிகு வெண்டரள மணிவடஞ் சூழ்ந்தமணி
மாமுலை குலுங்கநுழைநுண்
மருங்குலை எடுத்தெடுத் துந்திநிறை நீர்த்தட
மலர்ந்ததா மரைமலர்தோறும்
அன்னமரு வும்பெரு மணத்தம்மை மரகதத்
தம்மானை அடியருளே
அருளின்எம் குடிமுழுதும் அடிமைகொண்
யம்மானை ஆடியருளே. [டருளும்உமை 4

கருகாத பத்திமை கொழுந்துகொண் டெழவுட்
கசிந்துருகும் அன்பர்நிதியே
கருதுபொழு தாறுமலர் மாலைசந் தாதிபல
கைக்கொண்டு பூசையாற்றும்
பெருகாத காமத்தர் செல்வமே மாதவப்
பெரியோர்கள் பெற்றபேறே
பிழையறப் பாமாலை பெருநய முறப்பாடு
பெற்றியோர் உற்றவாழ்வே

திருகாத சிந்தைகொடு சகமுழுதும் நீயெனத்
தேர்ந்துணர்ந் தாரின்பமே
தென்ளமிர்த மேயினிய கனியே தேவிட்டாத
தேனே அறங்கள்நாளும்
அருநாத நற்பெரு மணத்தளி விளக்கமே
அம்மானை ஆடியருளே
அருளின்எம் குடிமுழுதும் அடிமைகொண்
அம்மானை ஆடியருளே. [டருளும்உமை 5

*வேறு*

அன்ன மலிதண் டுறையும்அணங்
கனையார் மொழியும் பானலமொட்
டாமை உறங்கும் வாவியும்மற்
றனையார் முலையுங் கோகனகம்
முன்ன இனிய பொழிலும்அவர்
முடிக்குங் கூந்தற் பகுப்புமஞ்சு
முகில்தோய் மதில்ஒ வமும்அனையார்
முழுமே னியுநல் லஞ்சுவணம்
பன்ன முடியா மனையும்அவர்
பாதத் தணியுஞ் சிலம்புநெடும்
பழன மெங்கும் அத்தகைய
பாவை மாருஞ் செஞ்சாலி
என்ன வளங்கூர் பெருமணப்பெண்
எடுத்தா டுகபொன் அம்மனையே
எங்கள் குடிக்கோர் வாழ்முதல்கை
எடுத்தா டுகபொன் அம்மனையே, 6

காலா தரிக்குங் கழனிதோறுங்
கமஞ்சூல் உயிர்ப்ப வயிறுளைந்து
காண்டற் கினிய சலஞ்சலம்நீர்
காலும் மடைவாய் முத்துகுப்பக்
கோலா ஒளிரவ் வேண்டாளக்
குலையால் அடைபட் டறல்தேங்கக்
குலவ விளைந்த செஞ்சாலிக்
கோடுவண் கதிர்மூழ் கும்பொழுது
மாலா எழுவேள் ளோதிமந்தம்
வயங்கு சினையேன் றவைகவர்ந்தம்
மடையைத் திறந்து பெருகியநீர்
வடியச் செயலாற் பலர்உவக்குந்
தோலா வளமை நல்லூராய்
தோட்டா டுகபோன் அம்மனையே
சூழும் பிறவி யெனக்கொழிப்பாய்
தோட்டா டுகபோன் அம்மனையே. 7

மதிக்குங் கடவுட் பஞ்சதரு
வயங்கு நிழலில் வீற்றிருந்து
மாருக் கருவி பலகொண்டு
வண்ட லாடும் மடவாருந்
துதிக்கும் மருத நன்னிழலில்
தோலிற் கிடத்தி இளங்குழவி
துஞ்ச உறக்கிக் களைகடியுந்
தொழில்மேற் கொளமே வரிவையரும்

பதிக்கும் பயம்உட் புகக்கொண்டு
பலகால் இரிய மேலெழுந்து
பற்றுங் கொடிய கழுக்கடைபோற்
பாய்ந்து பாய்ந்து பருவாளை
குதிக்கும் புனல்நல் லூர்அமுதே
கொண்டா டுகபொன் அம்மனையே
கோலம் பொலிவெண் ணீற்றுமையே
கொண்டா டுகபொன் அம்மனையே. 8

ஆண்டா தரித்து நாயேனை
அல்லற் பிறவி அறுத்தருளும்
அருளா னந்தக் கடற்பிறந்த
அளவா இன்பச் சுவையமுதே
ஈண்டார் கலிசூழ் புடவிமுதல்
எப்பு வனத்தும் உறையுயிர்கள்
எல்லாம் பிறவிப் பிணியறுமா
றிமய முயிர்த்த அருமருந்தே
வேண்டா நிற்கும் மெய்யடியார்
விரும்பும் உள்ளக் கோயிலகம்
விருப்ப ருது நாளும்
மேவி அமர்சிந் தாமணியே
தூண்டா விளக்கே நல்லூராய்
தொட்டா டுகபொன் அம்மனையே
தோன்றுத் துணைக்கோர் துணையானாய்
தொட்டா டுகபொன் அம்மனையே. 9

குணத்தே போலியும் மெய்யடியார்
கோலம் போலியுங் குளிர்சிந்தைக்
கோயில் போலியு மாறுகுடி
கொண்டு போலியுங் கோமளமே
அணத்தோர் வரிய மறைமுயன்றும்
அணுகற் கரிய பேரொளியே
அறிவி லார்க்கும் முனிவரிதாய்
அள்ளூ றினிய பசுந்தேனே
கணத்தே மலர்சேற் றியபொழிலிற்
கனிந்த தேமாம் பழச்சாறு
கால்கொண் டோடிக் கடல்புகுந்து
கழியா உவரைக் கடத்துபெரு
மணத்தே அமர்வேண் ணீற்றுமையே
மகிழ்ந்தா டுகபொன் அம்மனையே
மலையிற் பிறந்த மடப்பிடியே
மகிழ்ந்தா டுகபொன் அம்மனையே. 10

## 9. நீராடற் பருவம்

எள்ளுதற் கரியகுழல் சைவல மெனச்சுழல
இணைவிழிகள் சேலின்இலக
எழில்வளர்குழைச்சேவிகள் வள்ளையிற் போலியமுகம்
இலகுதா மரையின்மலர
உள்ளுதற் கரியஇரு கோங்கையும் புற்புதத்
தோளிரமலர் உந்திசுழியின்
உறமுழங் தாள்அலவ னிற்கவின மற்றுள
உறுப்பும்ஒவ் வோன்றினிகழக்

கோள்ளுதற் கரியஒளி வயிரமுந் தரளமுங்
குருமணியும் ஒலிதிரைக்கை
கோண்டிரு கரைக்கணும் எறிந்தரம் பைச்சேழுங்
கூன்குலே முறித்துநிகழும்
விள்ளுதற் கரியஒரு கோள்ளிடத் திருநதியின்
வேள்ளநீர் ஆடியருளே
விண்ணேத்து சீர்மேவு வேண்ணீற் றுமாதேவி
வேள்ளநீர் ஆடியருளே. 1

புள்ளாறு காலுழக் குங்குழல் அநிந்திதை
போருங்கணே அனுக்கும்ஒண்கட்
போற்புமலி கமலினி முதற்ரேழி மார்பலர்
புரிந்துசூழ் நிற்பநடுவண்
உள்ளாறு பகையற ஒழித்தமா தவருளத்
துள்ளோளிய தாகிநாளும்
உறைபரா பரைநின்று சேவ்வாய் விளர்ப்பவரி
யுறுகருங் கண்சிவப்ப
நள்ளாறு பழையாறு கஞ்சாறு கோட்டாறு
நல்லாறு தருமையாறு
நாவலா ரேழுகுவட மேருமுற் பலதேம்
நயந்தவர் சடைக்குமஞ்சா
வேள்ளா றேனப்பரவு கோள்ளிடத் திருநதியின்
வேள்ளநீர் ஆடியருளே
விண்ணேத்து சீர்மேவு வேண்ணீற் றுமாதேவி
வேள்ளநீர் ஆடியருளே. 2

முண்ணுறு பங்கயச் சேக்கையமர் ஒருநான்
முகப்பிரமன் நாவும்ஒவா
முரண்மிக்க முரனுயிர் முருக்குமுழு வலியுடை
முகுந்தன்அகன் மார்பும்மேவு
பண்ணுறு மொழிமாதர் இருபாலும் நின்றுதம்
பங்கயச் செங்கையுதவப்
பற்றுபு சிலம்பொலித் திடநடந் திடுகிடைப்
பட்டறலுள் நனையநின்று
கண்ணுறு கொன்றையுந் தும்பையும் பாசொளிக்
காமர்அறு குங்கமழ்ந்து
ககனத் துலாம்பிறைச் சிறுமதியை வெண்டிரைக்
கையால் அலைத்துவரலால்
விண்ணு றெனப்பரவு கொள்ளிடத் திருநதியின்
வெள்ளநீர் ஆடியருளே
விண்ணேத்து சீர்மேவு வெண்ணிற் றுமாதேவி
வெள்ளநீர் ஆடியருளே. 3

பாலநிகர் சொற்பல மிருர்தக வடித்தவிரை
பான்மையின் எடுத்துதவநீள்
படைவிழிக் கமலமட வார்தங்கை கொண்டுநின்
பசுமேனி யிற்றிமிர்ந்து
சோலமயி லொத்தவிய லாய்அருள் விளக்கியேந்
தொல்வினைக் கழிவுதோன்றச்
சூட்டோதி மத்தினின் றினிதாடு வாய்என்று
தோலவில்முக மன்பலசொல

மாலைமதி வைத்தமுடி யாரோடு பகைத்ததென
மதமலை எடுத்தடுத்து
வருமீனம் வாய்க்கொள எறிந்துவிட முன்தந்த
மாபா தகந்தெரிந்தவ்
வேலையை உடைக்கும்ஒரு கோள்ளிடத் திருநதியின்
வெள்ளநீர் ஆடியருளே
விண்ணேத்து சீர்மேவு வெண்ணீற் றுமாதேவி
வெள்ளநீர் ஆடியருளே. 4

பற்றிஅர மாதர்முத லாயபல மாதரும்
பன்மலர்க் கோடியினின்று
பணிதலைக் கொள்ளஅவர் நாப்பணொரு பைங்கொடிப்
பண்பின்உல கேத்தநின்று
முற்றியறி யாதமுலை முத்தமோ டெதிர்வருவெண்
முத்தமிக் குறவுகொள்ள
முரிநுசுப் பணியுமே கலைமணியி ஞேடுபன்
முழுமணியும் அளவளாவச்
செற்றிய கடுக்கைமலர் சூடிமான் ஏந்திஎண்
டிசைநடுங் கரவத்தோடு
சினக்கோல வெண்மருப் புப்புனேங் தடுபுலிச்
சிறுதோல் விரித்துடுத்து
வெற்றிவிடை யானில்வரு கோள்ளிடத் திருநதியின்
வெள்ளநீர் ஆடியருளே
விண்ணேத்து சீர்மேவு வெண்ணீற் றுமாதேவி
வெள்ளநீர் ஆடியருளே. 5

வேறு

உன்னும் மனவாக் குடல் மூன்றும்
ஒன்ரு துடற்றல் ஒழிதரஉள்
உருகி யுருகி நேகிழ்ந்துநேகிழ்ந்
துடையு மிடையும் பேரடியார்
துன்னும் உழுவற் பேரன்பில்
துளேந்து துளேந்தா டுதல்போருவத்
தோன்ருத் துணேக்கோர் துணேயாய
சூட்டோ திமமே நடுநின்று
மன்னுந் தனக்குத் துணேயாகி
வன்காப் பியற்றும் பேருங்குலேக்கு
மகிழ்ந்து கோடுக்கும் பரிசேன்ன
மருங்கு முளரிக் கைநிறையப்
போன்னும் மணியும் எறியும்வட
போன்னிப் புதுநீர் ஆடுகவே
போற்பார் மணவை யம்மைவட போன்னிப்
புதுநீர் ஆடுகவே. 6

சேலே போருவப் பிறழ்கருங்கட்
சேவ்வாய் வேண்பற் ருேழியருட்
சேய்ய வேளிய மடமாதர்
தேண்ணீர் முழுகிச் சிலம்பணிபூங்
காலே வருட வேளிசேய்தவர்
கமல முகத்தின் முகந்ததுணேக்
கைந்நீர் கடுகி இரைப்பநறுங்
கங்கா சலமேன் றுன்னுபுதீம்

பாலே புரைசோல் அனையர்சிரம்
பரவக் கவிழ்ப்ப வரையுதித்துப்
பலவாம் உயிர்ப்பைங் கூழ்தழையப்
பண்ணித் தண்மை வாய்ந்துவினைப்
போலே சிறப்ப நிகழும்வட
போன்னிப் புதுநீர் ஆடுகவே
போற்பார் மணவை யம்மைவட போன்னிப்
புதுநீர் ஆடுகவே. 7

தேன்னங் குரும்பை அனையமுலைச்
சேவ்வாய்க் கருங்கண் அரமாதர்
தேம்பு நுழைநுண் ணுசுப்போசியத்
தேற்கும் வடக்குந் திரிந்துலவ
அன்னங் குலவும் ஒலிச்சிலம்பின்
அனிச்சம் மருட்டும் அடிகள்பேயர்த்
தம்போற் சிவிறி பந்துகள்கோண்
டவர்மேல் முகந்து நறும்புனல்தூய்
இன்னம் பிறவிக் கடல்அழுந்தல்
எங்கட் கியல்போ அருள்போழிவாய்
என்பார் இன்பார் கடல்மூழ்கி
என்றும் ஆட இனிதாட்டும்
போன்னங் கோடியே நேடியவட
போன்னிப் புதுநீர் ஆடுகவே
போற்பார் மணவை யம்மைவட
போன்னிப் புதுநீர் ஆடுகவே. 8

வேறு

நீடுநல் ஆகமம் ஓதிய வாறருள்
புல்லா ராயினும்நன்
னேயம் அருதகோர் ஞானம் உளார்மனம்
உள்ளால் வாழ்மயிலே
பாடுந லோன்இவ னுகுவ னேஎன
என்ளா தேஅடியேன்
பாடுபல் பாடல் விராவிய தார்புனை
பொன்னே கோமளமே
ஆடு நலார்மதி ஆள்சடை யார்மலை
வில்லார் மேனியின்நே
ராகிய பாதியில் வாழ்குயி லேவரை
மின்னே ஊர்பலவும்
நாடுநல் லூரமர் வாய்வட காவிரி
நன்னீர் ஆடுகவே
நான்மறை மேகலை யாய்வட காவிரி
நன்னீர் ஆடுகவே. ௭

பூமகள் நாமக ளாதி மினுர்தொழு
பொன்னே கோகிலமே
போத முருவேளி யேன்நவில் பாடலும்
எள்ளா தேபுனைவாய்
தேமரு மாலை அளாவிய வார்குழல்
நல்லாய் கார்மயிலே
தேவர் பிரானியல் மேனியில் ஒர்பயல்
வீள்ளா தேபொலிவாய்

காமரு சோலையுள் நீர்நிறை வாவியில்
நெல்லே கூர்செறுவிற்
காவில் விராவிய ஓடையில் நீள்கயல்
புள்ளா ராய்வளனூர்
நாமநல் லூரமர் வாய்வட காவிரி
நன்னீர் ஆடுகவே
நான்மறை மேகலை யாய்வட காவிரி
நன்னீர் ஆடுகவே, 10

## 10. பொன்னூசற் பருவம்

கோன்செய்த வயிரக் கொழுங்கால் நிறுத்திஒளி
கூர்பவள விட்டம்இட்டுக்
குளிர்மருவு நித்திலத் தொடர்பூட்டி நவமணி
குயிற்றுபொற் பலகைமாட்டி
மின்செய்த சிற்றிடைப் பெருமுலைக் கோகனக
மீதும்ஒண் புண்டரீக
மீதும்உறை மாதர்இரு பாலும்நின் றூர்வடம்
விரும்புதங் கைகள்பற்றத்
தென்செய்த தமிழ்முனியை எண்ணாது மீட்டுஞ்
சிலம்பெழுந் ததுகொலென்று
செங்கதிரும் வெண்கதிரும் நின்றுன்னி உள்ளந்
திகைப்பவான் கீண்டெழுந்து
பொன்செய்த மதில்சூழ் திருப்பெரு மணத்தம்மை
பொன்னூசல் ஆடியருளே
பொருவில்மந் திரசொரு பத்தனி விமானத்தி
பொன்னூசல் ஆடியருளே. 1

தேமணக் குங்குழற் செய்யவாய் வெண்ணகைச்
சேல்விழிப் பனுவலாட்டி
திரைவீசு சுவையமு தொழுக்கியது பொன்மெனத்
திருவூசல் இனிதுபாடப்
பாமணக் கும்புகழ்ச் செஞ்சடைத் தம்பிரான்
பார்த்துளத் துவகைபூப்பப்
பல்லா யிரங்கோடி அண்டமும் அவற்றுள்ள
பலசரா சரமும்ஆட
ஆமணக் குங்கரு முகிற்படாங் கீண்டுமே
லாயஉல கம்புகுந்தாங்
கமர்வார் செழுங்கற் பகத்தினின் றும்பிரித்
தறிதரா வண்ணம்நாளும்
பூமணக் கும்பொழில் வளப்பெருமணத் தம்மை
பொன்னூசல் ஆடியருளே
பொருவில்மந் திரசொரு பத்தனி விமானத்தி
பொன்னூசல் ஆடியருளே. 2

கொங்குமலி தேமாந் தளிர்ப்பொழில் நடுக்கணமர்
கோகிலப் பேடுபொருவக்
கோகனக ராகமணி யேசுற்று முற்றுங்
குயிற்றுபொற் பலகையேறிச்
செங்குமுத வாய்அர மடந்தையர் விரைக்குமலர்
செங்கைநிறை யக்கொண்டுநின்
திருமுனர்த் தூவுபு குடந்தமுற் றகலாது
சேவித் துவந்துநிற்கச்

சங்குபல எங்குங் கரும்பரம் பைக்குலஞ்
சாலியாய் உறலுணர்ந்து
தாவாத வேதனை யோடுந்தவழ்ந் தேறிஅத்
தாமரையின் முத்துயிர்க்கும்
பொங்குபுனல் வாவித் திருப்பெரு மணத்தம்மை
பொன்னூசல் ஆடியருளே
பொருவில்மந் திரசொரு பத்தனி விமானத்தி
பொன்னூசல் ஆடியருளே. 3

மேலாய சத்துவ மெனப்பகர் குணத்துநடு
வீற்றிருந் தருளல்என்கோ
மெய்யடியர் முன்செல நடாத்துவான் ஒதிம
மிசைப்பொலிந் தமர்வதென்கோ
நாலாய மறைபுகழும் வெள்ளிவெண் கயிலைவரை
நாப்பணமர் தோகையென்கோ
நானென்று கலைமகள் வியந்துபா டச்சுரர்
கணங்கள்கண் டுவகைநீடப்
பாலாய ஒள்வயிர முற்றுங் குயிற்றகன்
பலகையின் இவர்ந்திருந்து
பைம்பொன்செய் கோபுரம் எழுந்தொளி பரப்பிஇருள்
பாற்றிவட மேருவேற்பைப்
போலாய வளமைத் திருப்பெரு மணத்தம்மை
பொன்னூசல் ஆடியருளே
பொருவில்மந் திரசொரு பத்தனி விமானத்தி
பொன்னூசல் ஆடியருளே. 4

கயல்தங்கு நின்றிருக் கட்கடை உதித்துமிசை
காணப் பரந்தெழுந்து
கருதுவார் இருவினை மரங்கள்கால் சாயஅலை
கான்றணையர் பிறவிவாரி
மயல்தங்கு வன்கரைஉ டைந்தடி யறப்போங்கும்
வான்பெருங் கருணைவெள்ளம்
வற்றுது நின்கைக் கடைப்பிறந் தெழுவெள்ளம்
மனம்அஞ்சி உட்கிவட்கி
அயல்தங்கும் ஒருதிவலை யாகப்ர வாகமுற்
றகிலநிகி லமும்விராவ
அமராவ திக்கற் பகத்தோ டமர்க்கும
தகற்றுவான் மேற்படுத்துப்
புயல்தங்கு சோலைத் திருப்பெரு மணத்தம்மை
பொன்னூசல் ஆடியருளே
பொருவில்மந் திரசொரு பத்தனி விமானத்தி
பொன்னூசல் ஆடியருளே. 5

நன்னயம் விராவியுளம் நெக்குநெக் குருகுநர்
நயக்குநின் தாமரைத்தாள்
நகுபொழிற் பிண்டியை உதைந்தாடு தோறும்அது
நகத்தளிர்த் தினிதுபூத்தல்
பன்னயம் விராவும்அச் சிற்றடிப் பெருமையுட்
பதிதர உணர்ந்துபூசை
பண்ணுவான்நிற் கும்நிலை காட்டஅது கண்டவை
படுந்தோறும் அருக்கமலர்தூ

மின்னியல் பிரான்சடை அழுக்காறு மேவநன்
மேகமும் உடுக்கூட்டமும்
விராவிய தேனக்கா ரடைத்திரள் அரும்புகள்
விளங்கச் சுமந்துசூழ்ந்த
புன்னையங் கானற் றிருப்பெரு மணத்தம்மை
பொன்னூசல் ஆடியருளே
பொருவில்மந் திரசொரு பத்தனி விமானத்தி
பொன்னூசல் ஆடியருளே. 6

ஆதார பங்கயந் தோறும்வன்ன ரூபியாய்
அமர்வதுங் கருணையேமெய்
யாயபெரு மான்பெறற் கரியவா மத்திலினி
தமர்வதுங் கருணைமிகையாற்
பாதார விந்தம் பதித்திருங் கயிலைமுற்
பஃறலத் தமர்வதும்விடார்
பற்றினர் உள்ளகத் தமர்வதும் பொரஒளி
படுந்துகிர்ப் பலகையினமர்ந்
தோதாரம் வில்லிடக் குறுமூரல் நிலவெழ
உறுங்கருணை பொங்கச்சிறை
ஒதிமஞ் சிறையில்ஒ திமமநிகர இரைதேர்ந்
துறுங்குறிப் பிற்கமலமேன்
போதார அமருந் திருப்பெரு மணத்தம்மை
பொன்னூசல் ஆடியருளே
பொருவில்மந் திரசொரு பத்தனி விமானத்தி
பொன்னூசல் ஆடியருளே. 7

வலிய வரனுல்அமரர் வானகங் கூட்டுண்டு
மகிழ்முரட் சூரன்இளவல்
மக்களோடு வாழ்கின்ற பேரில்அழி யச்சிற்றில்
மறுகூ டுலாய்அழித்தும்
கலியஅவன் வாய்தற் பேநம்பறை முழக்கறக்
காமர்சிறு பறைமுழக்கங்
கண்டும்அவன் ஊரும்இந் திரஞால மேன்றுரை
கதிர்ப்போலங் தேருருளுரு
தோலியசிறு தேர்இனி துருட்டியும் விளையாடும்
ஒண்சதங் கைச்சிறியதாள்
ஒருகுழவி யைத்தனி உவந்தேடுத் துப்புல்லி
ஒண்மணித் தோட்டில்ஏற்றிப்
போலியஇனி தாட்டுந் திருப்பேரு மணத்தம்மை
போன்னூசல் ஆடியருளே
போருவில்மந் திரசோரு பத்தனி விமானத்தி
போன்னூசல் ஆடியருளே. 8

ஆதரம்பேருகக் கசிந்துநேக் குருகுபழ
அடியர்மன மாயதூய
ஆலயத் தினிதமர்ந் தாடுதலை யோப்பமுத்
தவிர்சேமும் பலகையேறிக்
காதரங் கடையேங் கழிந்துய்ய வேவ்வினை
கழீஇப்போங் கிடுங்கடைக்கட்
கருணைவேள் எம்பேருக எம்பிரான் சடைமுடிக்
கங்கைவேள் எஞ்சுருங்க
மீதரம் பையர்அமர ரோடுகீழ் இறங்கஅகன்
மேதினி யுளார்அவ்வாறு
மேல்ஏற வைத்தநேட் டேணியேயாமேன
விளங்குகோ புரம்வடாது

பூதரம் பொருவுந் திருப்பெரு மணத்தம்மை
பொன்னூசல் ஆடியருளே
பொருவில்மந் திரசொரு பத்தனி விமானத்தி
பொன்னூசல் ஆடியருளே. 9

அற்புமலி உள்ளம் புகும்பரி புரத்தாளும்
அறைவிலை இலாதசெம்பட்
டாடைபுனை மேகலை மருங்குலும் நெருங்குபே
ரண்டமுற் றீன்றவயிறும்
வற்பு மலிபரஞானம் ஊறும் இருகொங்கையும்
மங்கலம் பொலிகழுத்தும்
மாரு திரண்டுதலை இட்டமுப் பஃதறமும்
வளர்பங் கயச்செங்கையும்
வெற்புமலி பசுவேய் சவட்டும் இருதோளும்இள
வெண்மூ ரலுஞ்செவாயும்
மிளிர்குழை யுமலர்முகமு மணிநாசி யுங்கருணை
விழியுங் கருங்கூந்தலும்
பொற்புமலி யப்பொலி திருப்பெரு மணத்தம்மை
பொன்னூசல் ஆடியருளே
பொருவில்மந் திரசொரு பத்தனி விமானத்தி
பொன்னூசல் ஆடியருளே. 10

திருப்பெருமணநல்லூர்த்
திருவெண்ணீற்றுமை பிள்ளைத்தமிழ் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்

## சிவலோகத் தியாகேசர் துதி

நீர்கொண்ட நெடுஞ்சடைமேல் இளமதிதண்நிலவெறிப்ப
நிலவு செம்பொன்
வார்கொண்ட துணைப்புளக முலைத்திருவெண்
வாமம் ஓங்க [ணீற்றுமையாள்
கூர்கொண்ட படைத்திகிரி மால்முதல்வா னவர்போற்றக்
கோதி லாத
சீர்கொண்ட மணவைவளர் சிவலோகத் தியாகர்பதம்
சென்னி சேர்ப்போம்.

## திருவெண்ணீற்றுமை துதி

ஆரணியைப் பெருங்கருணை வடிவாளை உலகங்கள்
அனைத்தும் ஈன்ற
காரணியைச் சிற்பரையை வேற்பரையன் புதல்விதனைக்
கடுக்கை யென்னும்
தாரணிஐ யானனத்தர் சிவலோகத் தியாகர்இடந்
தன்னில் வாழும்
பூரணியை எழில்திருவெண் ணீற்றுமையை எப்போதும்
போற்றி வாழ்வாம்.

— ஆச்சான்புரத் தலபுராணம்.

உ

சிவமயம்

# ஆறாந்திருமுறை

## ( குறிப்புரையுடன் )